ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பூர்வாசார்யர் அருளிச்செய்த



# திருக்கச்சிநம்பி ப்ரபாவம்

---

திருமயிலை பேயாழ்வார் பக்தஜன சபையின் காரியதரிசியும்

இல்லத்தோழன் பதிப்பாசிரியருமாகிய

ம. கோ. விஜயராகவ முதலியாரால்

பரிசோதிக்கப்பட்டு,

கோயில் கந்தாடை - அண்ணன் ஸ்வாமிகளின்

திருவடி ஸம்பந்தியும்

திருவல்லிக்கேணியிலிருக்கும்

ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாய புஸ்தகசாலாதிகாரியுமாகிய

கா. வெ. திருக்கச்சிநம்பி தாஸரால்

---

சென்னை

ஆநந்த அச்சேந்திர சாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1906௵ மார்ச்சு௴ விசுவாவசு௵ மாசி௴.

விலை அணா 4.

றேர் முன்னின்று னுடைய விஹாரதேஶத்துக்கு மேற்கே யோஜனைதூரத்திலே "உலகுமழிசையு முள்ளுணர்ந்து தம்மில், புலவர்புகழ்க் கோலாற் றூக்க உலகுதன்னை, வைத்தெடுத்த பக்கத்தும் மாநீர்மழிசையே, வைத்தெடுத்த பக்கம் வலிது" என்று ப்ரஸித்தமாய் பக்திஸார மஹாமுனிக்குப்பிறப்பிடமான மஹீஸாரபுரத்துக்கு (திருமழிசைக்கு) கிழக்கே ஒரு க்ரோஶமாத்ரத்திலே சீரிய தொண்டைவள நாட்டுக்குத் துலங்கு மணிமுடி போன்றதாய் "படியிடைமாடத் தடியிடைத்தூணிற்பதித்த பன்மணிகளினொளியால், வெடிபகலிரவென் றறிவரிதாய" என்கிறபடியே துவளில் மாமணி மயங்களான மாடமாளிகை சூழ்ந்தழகாய பூவிருந்தவல்லி என்கிற மாநகரத்திலே, ஸர்வேஶ்வரனுடைய திருத்துடையிலே யுத்பந்நமான வைஶ்யவம்ஶத்திலே "ஏழாட்காலம் பழிப்பிலோம்" என்கிறபடியே ததீயபர்யந்தமான தேவதாந்தரஸ்பர்ஶமும் மந்த்ராந்தர ஸாதநாந்தர ப்ராப்யாந்தர ஸம்பந்தமும் அற்றிருக்கிற ஶ்ரீவைஷ்ணவ ஸந்ததியிலே ஸதாசார்ய ஸமாஶ்ரயணமுண்டான வீரராகவரென்பாரொரு மஹாநுபாவர் ஜநகராஜ நந்தனியான பிராட்டிக்கு ஒப்பென்னலாம்படியான குணபூர்த்தியை யுடையராய் அதற்கேற்பக் கமலை என்கிற திருநாமத்தை யுடையரான மடக்கையைத் திருமணம்புணர்ந்து ஸகலபோகங்களையும தர்மவிரோதமின்றிக்கே யதாகாலம் அநுபவியாநின்றுகொண்டு போருகிற காலத்திலே, இவருக்கு ஸஹதர்மசாரிணியான கமலை கர்ப்பிணியாக அதற்கநுகுணங்களான தௌஹ்ருத லக்ஷணங்கள் தோற்ற பும்ஸவநாதி க்ரியாகலாபங்களை யதாவிபவமாய் நடத்த பத்தாமாஸத்தில் ப்ராதஸ் ஸந்த்யையானது ப்ரபாகரனைப் பெறுமாபோலே உஜ்வலனான ஒருபுத்ரனைத் திருவயிறுவாய்க்க, பிதாவான வீரராகவரும் ஜாதகர்மா

தி* ஸகல க்ரியைகளையுஞ் செய்து பத்துநாளுங் கடந்த விரண்டாநாள் திருவிலச்சினையும் ப்ரஸாதித்து திருவேங்கடவர் என்று அந்தப்பிள்ளைக்கு நாமகரணத்தையும் பண்ணினார். பின்னையும் இரண்டு மூன்று வர்ஷத்தில் ஒரு பிள்ளைபிறக்க அவருக்குத் திருவேங்கட முடையானுடைய ஆஸ்ரிதவாத்ஸல்ய ஸூசகமான அருள்கூரப்பன் என்கிற திருநாமத்தைச் சாத்தினார். பின்னையொரு பிள்ளையுண்டாக அவருக்கு மலைகுனியநின்றான் என்கிற திருநாமத்தைச் சாத்தினார்.

---

* ஜாதகர்மாதி க்ரியைகளாவன:—ஜாதகர்ம, நாமகரண, அந்நப்ராஸந, சௌள, உபநயநாதிகள். இவற்றுள் ஜாதகர்மமாவது - பிறப்பைக்குறித்துச் சிசுவுக்குச் செய்வதோர் வைதிகசுத்தி; அதாவது, நெய் தேன் இவ்விரண்டுங்கூட்டி அதில் மந்த்ரபூர்வகமாய்ப் பொன்னையுரைத்து பிறந்தவுடனே அச்சிசுவுக்கு நாவிற்றடவுவது. நாமகரணமாவது - பெயரிடுதல்; அது குழந்தைபிறந்த பத்தாநாள் அல்லது பன்னிரண்டாநாள்செய்யப்படவேண்டும். அந்தப்பெயரானது ப்ராஹ்மணனுக்கு ஶர்மாஎன்கிற பதத்தோடும், க்ஷத்திரியனுக்கு வர்மா என்கிற பதத்தோடும், வைசியனுக்கு குப்த என்கிறபதத்தோடும், ஶூத்ரனுக்கு தாஸ என்கிற பதத்தோடும் கூடி யிருக்க வேண்டியது. அந்நப்ராஶநமாவது = சோற்றையுண்பித்தல். இது குழந்தைக்கு ஆறாவது மாஸத்திற்செய்யப்பட வேண்டியது. (அல்லது தங்கள் குலவழக்கப்படி மூன்றாவது மாஸந்தொடங்கி எப்போதாவது செய்யப்படலாம்.) சௌளமாவது – குடுமிவைத்தல். இது குழந்தைபிறந்த வருஷத்திலாவது மூன்றாவது வருஷத்திலாவது செய்யப்படவேண்டியது. உபநயநமாவது – பூணூல்தரிப்பித்தல்

## திருக்கச்சிநம்பிகள் ஜனனம்.

அக்காலத்திலே ஸ்ரீயஃபதியாய் அவாப்த ஸமஸ்த காமனாய் ஸர்வலோக ஶரண்யனாய் ஸ்ரீ வைகுண்ட நிகேதனனான ஸர்வேஶ்வரன் தான் ஸர்வஸ்வாமியாகிலும், அருள் புரிந்த சிந்தை யடியார்மேல் வைத்து ஸ்வஜ்ஞான வர்த்திகளாய் தைவப்ரக்ருதிகளான கோதிலடியார்களைத் திருத்தும் தன்னுடைய ஸஹஜ ஸௌஹார்த்தத்தாலே இவர்கள் உஜ்ஜீவிக்கும் விரகேதோவென்று சிந்தித்து, பார்வை வைத்து ம்ருகம்பிடிப்பாரைப்போலே ஸஜாதீயரைக் கொண்டு இவர்களைத் திருத்துவோமென்று திருவுள்ளமாய், ''வைகுந்தத்தமரரும்முனிவரும்'' என்று சொல்லப் பெறுகிற அந்தமில்பேரின்பத்தடியார்களிலே ஒருவரான ஸ்ரீ ஸேநாபதி யாழ்வாரைக்குறித்து நீர் இருள்தருமா ஞாலத்திலே மனுஷ்ய ஸஜாதீயராய் அவதரித்து தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பத்திலே அநர்த்தப்படுகிற ஸம்ஸாரிசேதனரைக் கரையேற்றிவாருமென்று ப்ரேரிக்க, ஸ்ரீ ஸேநாபதியாழ்வாரும் எல்லாம் அறியவல்ல இயல்புடையராகையாலே எல்லாருடைய ஸ்வபாவத்தையும் ஸாக்ஷாத்கரித்து தஶரதச் சக்ரவர்த்தியைப் பிதாவாக அங்கீகரித்த பெருமானைப்போலே வீரராகவரைத் தமக்கு ஜநகராக.

---

இது கர்ப்பத்திலிருந்தது முதல் எட்டாம்வர்ஷத்தில் ப்ராஹ்மணனுக்கும், பதினோராம்வர்ஷத்தில் க்ஷத்திரியனுக்கும், பன்னிரண்டாம் வர்ஷத்தில்வைஶ்யனுக்கும் செய்யப்படவேண்டும். ப்ரஹ்மதேஜஸ்ஸை விரும்புகிறப்ராஹ்மணனுக்கு ஐந்தாவது வர்ஷத்திலும், பலத்தை விரும்புகிற க்ஷத்ரியனுக்கு ஆறாவது வர்ஷத்திலும், பொருளை விரும்புகிற வைஶ்யனுக்கு எட்டாவது வர்ஷத்திலும் உபநயநம் செய்யத்தக்கது.

ஸ்வீகரித்து அநுப்ரவேஶித்தார். பின்பு ஒரு ஶுபதின த்திலே அந்த தம்பதிகளுக்கு ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்த மாய் கமலையும் கர்ப்பந்தரித்தாள். அப்போது பூர்வ கர்ப்பங்களைப் போலன்றிக்கே ஆச்சரியமா யிருப்பதொரு காந்தி விசேஷத்தைக்கண்டு பந்துக்கள் இதுவொரு அதி ஶய மிருந்தபடி யென்னதானென்று விஸ்மிதராய் மஹா புருஷாதிஷ்டாநத்தாலே வந்ததென்று நிச்சயித்தார்கள். வீரராகவரும் இந்தகர்ப்பத்தாலே லோகத்துக்கு அதிசய முண்டென்று நிச்சயித்து ஸந்தோஷித்துக் கொண் டிருந்தார்.

"[illegible]
[illegible]
[illegible]
[illegible]"

"யோகர்திஸங்க்யஶகவர்ஷகணேவ்யதீதே
ஸௌம்யேரவௌகடமுபேயுஷி ஶுக்லபக்ஷே
தாரேவிதோஸ்ஸுரகுரோர் திவஸே தஶம்யாம்
ஆவிர்பபூவகமலாதநயோமஹாத்மா."

என்கிறபடியே ஶகவர்ஷம் கூ௱ -க்கு மேற்செல்லுகின்ற ஸௌம்யவர்ஷம் மாசிமாஸம் சுக்லதஶமியும் வியாழக் கிழமையுங்கூடின ம்ருகசீர்ஷ நக்ஷத்திரத்திலே வ்ருஷப லக்னத்திலே "பருவம் நிரம்பாமே பாரெல்லாமுய்ய, திருவின் வடிவொக்கும் தேவகிபெற்ற" என்கிறபடியே அவதரித்தருளினார். வீரராகவரும் அதிஸந்துஷ்டராய் ஸ்நாநம்பண்ணி, கோதாநமுதலிய தாநங்களையும் ஸத்பாத்ரங்களிலே தானஞ்செய்து ஜாதகர்மத்தையும் விதிப்படி நிறைவேற்றி, பன்னிரண்டாநாள் அநேக ஸ்ரீ வைஷ்ணவர்களைத் திரட்டி இவருக்கு மேல்வருவதான

பேரருளாளர் திருவடிகளிலே கைங்கர்யத்துக் கீடாக திருக்கச்சி நம்பி என்று திருநாமஞ்சாத்தினர். இவரும் அதிதேஜஸ்வியாய் அத்யந்தம் மேதாவியுமாய் ஸவயஸ்க ரெல்லாரிலும் விஞ்சின ஸாமர்த்ய முடையவராய் ஶுக்லபக்ஷ சந்த்ரனைப்போலே வளர்ந்துகொண்டு, குணவொழுக்கத்தாலே பிதாவுக்கும் மற்றுமுள்ள பெரியோர்களுக்கும் ஆநந்தாவஹராயிருந்தார். இவருடைய மாதாவாகிய கமலையும் "என்னநோன்பு நோற்றாள்கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள்" என்று எல்லாருங் கொண்டாடும் படியானாள்.

## பித்ரார்ஜ்யத்தை ததீயாராதனத்தில் செலவழித்தது.

பின்பு நம்பிகளும் தம்முடைய வர்ணத்துக்கேற்ற வித்யாஸ்தாநங்களையெல்லாம் ஆயாஸமின்றிக்கே அதிகரித்து பிறர்க்கு உபதேஶிக்கும்படியான பாண்டித்யத்தையுடையராய், ப்ராதாக்களுடனே ஒத்தமனமுடையவராய் அர்த்தகாமாதிகளில் ஆஸக்தி யில்லாவிட்டாலும் வாணிஜ்யத்திலே நிரதிஶயமான நைபுண்யத்தையுடையராய்ப் போருகிறகாலத்திலே, வ்ருத்தரான வீரராகவரும் குமாரர்களுக்கு தகுந்த காலங்களிலே உபநயந கர்மத்தையும் நிறைவேற்றி, பின்பு ஸ்வார்ஜிதமான தனத்தை இவர்களைக்கொண்டு வ்ருத்திசெய்வித்து தாமிளைப்பாற நினைத்துப் பிள்ளைகளை யழைத்து "நமது குலத்துக்குசிதமான வாணிஜ்யத்திலே நிரந்தரமாய் வ்யாபரித்துப்போந்த நான் ஶ்ராந்தனானேன். இனி நீங்கள் இந்த தநத்தை காலதேஶாநுகுணமாக பந்துவிரோத மில்லாதபடியாய் ந்யாயோபேதமுமாயிருந்துள்ள வாணிஜ்ய தர்மத்தாலே வர்த்திப்பித்துக்கொண்டு வாழுங்கள்" என்று ஸமமாகப்

பிரித்து நாலுபேருக்குங்கொடுக்க, அவர்களும் அப்படியே ஸ்வ வர்ணோசிதமான வாணிஜ்யத்திலே ப்ரீதியையுடைய ராய் பிதாவினுடைய அநுமதியை அவலம்பித்து தந்த முடைய தநத்தை யதோசிதமாய் வ்ருத்திசெய்து வந்தார் கள். திருக்கச்சிநம்பிகளோ பகவத்குணாநுபவத்தி லீடுப ட்ட ஹ்ருதயத்தை யுடையராகையாலே க்ஷுத்ர புருஷா ர்த்தமான தநதான்யாதி த்ரவ்ய ஸம்பாதநத்திலே நோக் கற்றவராய் ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானைப்போலே தாமும் பகவ த்விஷயைக ப்ரவணராய், இதரரையும் பகவத் ப்ரவணரா ம்படி திருத்திக்கொண்டு பிதா அளித்த தநத்தை பல்படி யாலும் குடி குடிவழிவந்தாட்செய்யும் தொண்டரான ததீயர் கள்பொருட்டு விநியோகியா நின்றுகொண்டும் அவர்களுட னே பகவத்குணங்களையே பேசாநின்றுகொண்டும் எழுந் தருளியிருந்தார்.

## நம்பிகள் கைங்கர்யபரரானது.

அக்காலத்தில் ஒருநாளளவிலே இவருடைய பிதா வான வீரராகவர் இவருடைய ஶீலத்தை யறிந்தாலும் புத்ரர்களை யழைத்து "வாருங்கள் பிள்ளைகாள், நான் முன்னம் உங்களுக்குத் தந்த தநத்தின்மேல் நீங்கள் உங்களுடைய ஸாமர்த்யத்தாலே ஆர்ஜ்ஜித்த தெவ் வளவு? அதை நான் பார்க்கவேண்டும்" என்ன, திரு வேங்கடவர் முதலானோர் மூவரும் அப்படியே கொண்டு வந்து காட்ட வீரராகவரும் கண்டு களித்து, திருக்கச்சி நம்பியை யழைத்து "நீர் ஸம்பாதித்த தந மெங்கே" யென்ன, இவரும் "கலங்காப்பெருநகரிலே சேமி த்து வைத்தேன்" னென்ன, வீரராகவரும் அதாவதென் னென்ன, நம்பியும் "வானிளவரசு வைகுந்தக்குட்டன் வாசு தேவன் மதுரைமன்னனுடைய முகமலர்த்தியே புருஷார்

த்தமாகவெண்ணி தத்ஸாதநமான ததீயாராதநத்தைப் பண்ணினே" னென்ன, அதைக்கேட்டு வீரராகவரும்ஹர்ஷப்ரஹர்ஷத்தை ஹ்ருதயாந்தர்கதமாக மறைத்துக்கொண்டு க்ரோதத்தை ஆரோபித்து புத்ரருக்கு ஹிதகாமராய், ஆகில்உமக்கு தாதராய்ப்போகமமையுமென்ன, அந்த ஸமயத்திலே மாதாவான கமலை சில தனங்களைக் கொடுத்து இந்த தனத்தை உம்முடைய பிதாவுக்குக் காண்பியுமென்ன, நம்பியும் அது உசிதமன்று, ஹிதபரரான பிதாவினுடைய வாய்மொழிப்படியே நடக்கவேண்டுமென்று நிஸ்சயித்து நிர்மலராய் க்ருஹக்ஷேத்ராதிகளைவிட்டு திருவல்லிக்கேணியிலே சென்று தெள்ளிய சிங்கமாகிய தேவையும், பார்த்தன்தன்தேர் முன்னின்றானையும், சிற்றவைப்பணியால் முடிதுறந்தானையும், ஆனையின்றுயரந்தீரப் புள்ளூர்ந்து சென்றுநின்றாழிதொட்டானையும், வேதத்தின் சுவைப்பயனாகிய மன்னாதனையும், பக்திஸாரரையும் பேயாழ்வாரையும் ஸேவித்து ஐந்தாறுநாள் எழுந்தருளியிருந்து, பின்பு தக்கோர் பரவுந் தடஞ்சூழ் பெரும்பூதூர்க்கெழுந்தருளி வாஸம் செய்துக்கொண்டு "ஹஸ்திகிரியிலே பேரருளாளர் ஸந்நிதியில் நித்யவாஸம் செய்துக்கொண்டு அமரர்களதிபதியாகிய தேவப்பெருமானுடைய திருவடிகளிலே அநவரதகைங்கர்யம் செய்துக்கொண்டிருக்கும்படியான காலம் எப்போது வாய்க்கும்" என்று ப்ரார்த்தித்துக்கொண்டு எழுந்தருளி யிருக்கும் நாளிலே, பிணியொழித்தமரர் பெருவிசும்பருளும் பேருளாளனெம்பெருமானான ஹஸ்திகிரியருளாளர் நம்பி ஸ்வப்நத்தில் எழுந்தருளி, வாரீர் நம்பி, நம்மூரில் வந்து நம் பரிஸரத்திலே நமது மநோரதப்படி வர்த்தியும் என்ன, நம்பியும் தேவரீரெழுந்தருளியிருக்கிற திவ்யதேஸமேது, தேவரீர் திருநாமமென்ன என்று வினவ,

“𑌕 𑌇𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌨𑌾𑌮 𑌤𑍇𑌨 𑌤𑌤𑍍𑌰𑌾𑌞𑍍𑌚𑌿𑌤𑍋 𑌹𑌰𑌿𑌃।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌕𑌾𑌞𑍍𑌚𑍀𑌤𑌿 𑌵𑌿𑌖𑍍𑌯𑌾𑌤𑌾 𑌪𑍁𑌰𑍀 𑌪𑍁𑌣𑍍𑌯𑌵𑌿𑌵𑌰𑍍𑌧𑌨𑍀॥
𑌅𑌸𑍍𑌤𑌿 𑌹𑌸𑍍𑌤𑌿𑌗𑌿𑌰𑌿𑌰𑍍𑌨𑌾𑌮 𑌤𑌤𑍍𑌰 𑌶𑍈𑌲𑌵𑌰𑍋 𑌮𑌹𑌾𑌨𑍍
𑌵𑌿𑌧𑌾𑌤𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌰𑍍𑌚𑌿𑌤𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃 𑌤𑌸𑍍𑌯 𑌶𑍈𑌲𑌸𑍍𑌯 𑌮𑍂𑌰𑍍𑌧𑌨𑌿।
𑌵𑍇𑌗𑌵𑌤𑍍𑌯𑍁𑌤𑍍𑌤𑌰𑍇 𑌤𑍀𑌰𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑍋𑌟𑍍𑌯𑌾𑌂 𑌹𑌰𑌿𑌃 𑌸𑍍𑌵𑌯𑌮𑍍
𑌵𑌰𑌦𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑌦𑍍𑌯𑌾𑌪𑌿 𑌪𑌰𑌿𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇॥”

“கஇதிப்ரஹ்மணோநாம தேநதத்ராஞ்சிதோஹரி:
தஸ்மாத்காஞ்சீதிவிக்யாதா புரீபுண்யவிவர்தனீ.
அஸ்திஹஸ்திகிரிர்நாம தத்ரஸைலவரோமஹான்
விதாத்ராப்யர்சிதோவிஷ்ணு:தஸ்யஸைலஸ்யமூர்தநி.
வேகவத்யுத்தரேதீரே புண்யகோட்யாம்ஹரிஸ்வயம்
வரதஸ்ஸர்வபூதாநா மத்யாபிபரித்ருஶ்யதே.”

இத்யாதிகளில் ப்ரஸித்த வைபவமான கச்சிநகர் காணும் நம்மூர். உலகேத்துமாழியான் அத்தியூரான் காணும் நாம், என்ன இவரும் ஆகிலும்மூர்க்கு வழியறியேனென, பேரருளாளரும் இங்கு நின்று நம்மூரைக்குறித்துப் புறப்பட்ட வுமக்கு எவ்வழியிலே செங்கழுநீர்ப்புஷ்பம் சிந்திக்கிடக்கிறதோ அவ்வழியே பார்த்துக்கொண்டு வாருமென் றருளிச்செய்ய, நம்பியும் மற்றுநாள் விடியோரை யெழுந்திருந்து ஸ்வப்நமிருந்தபடியை நினைத்து விஸ்மிதராய் அவ்வுத்தேஸத்தோடுபுறப்பட அவ்வழியிலே செங்கழுநீர் புஷ்பம் சிந்தி யிருக்கக்கண்டு களித்து மண்திணிஞாலமும் ஏழ்கடலும் நீள்விசும்பும் கழியப் பெரிதாலென்கிற காதலுடனே சென்று “பூவியல் பொழிலுந்தடமுமவன் கோயிலுங்கண்டு, ஆவியுள்குளிர” என்கிற படியேசைத்ரரதத்தையும் நந்தநவநத்தையும் பரிஹாஸியாநின்றுள்ள திருநந்தநவநங்களையும், தாமரைத்தடாகங்

களையும் கண்டுகந்து "நீசனேன் நிறைவொன்றுமில லேன்" என்கிற நீசனுன எனக்கு இந்தமகாபுருஷார்த் தம் கிட்டுவதேதாவென்று சந்தேஹித்து பத்தாஞ்ஜலி புடராய், நிரவதிகமான ஹர்ஷத்தாலுண்டான பாரவஶ் யத்தாலே ஒசிந்த நுண்ணிடைமேற் கையை வைத்து நொந்து நொந்து கசிந்த நெஞ்சினளாய்க் கண்ண நீர் துளும்பச் சென்ற உண்ணுஞ் சோற்றில் பிராட்டியைப் போல ஒருவண்ணஞ்சென்றுபுக்கு, அதிபாவகமாயும் மனோ ஹரமாயுமிருந்துள்ள திருவநந்த ஸரஸ்ஸிலே நீராடி ஶுக்லவஸ்த்ரதரராய் கேஶவாதித்வாதஶநாமங்களாலே ஊர்த்வபுண்ட்ரங்களையும் பகவதபிஷேகோபயுக்த ஹரி த்ராசூரணத்தையும் தரித்தருளி ஸ்ரீ பலிபீடத்தையும் த்வஜஸ்தம்பத்தையும்ஸேவித்து ப்ரதக்ஷிணமாகவுள்ளே புகுந்து திருவபிஷேக மண்டபத்தை தண்டன் ஸமர்ப் பித்து திருப்புற்றை வலமாக வந்து கரியமாணிக்கத்தாழ் வாரையும் ஸேவித்து ப்ரதக்ஷிண க்ரமத்திலே பேரருளா ளர் பெருந்தேவித் தாயாரையும் திருவடிதொழுது "பங் கயத்தாள் திருவருளுங்கொண்டு" என்கிறபடியே தத் கடாக்ஷங்களிலே ஸந்துஷ்டிதராய் த்ருதீயாவரணத் திலே ப்ரவேஶித்து அத்தியூரானென்கிற அழகிய சிங்கரை யும் அடிபணிந்து ஸேநாபதியாழ்வாரையும் ஸேவித்து அவரநுமதிபெற்று முக்தனுனவன் திருவநந்தாழ்வானைக் காலாலே துகைத்தேறுமாப்போலே ஸோபான மார்க்கத் தாலே ஹஸ்திகிரியாகிற திருமலையிலேயேறி கச்சிக்கு வாய்த்தான் என்கிற திருமண்டபமான வையமாளிகை யிலே சென்று தண்டன் ஸமர்ப்பித்து ஜயவிஜயாநுஜ் ஞையாலே 'பொன்னியலுமாடக் கவாடங்கடந்து புக்கு மன்னன் திருமார்பும் வாயுமடியிணையும் பன்னுகரதலமுங் கண்களும் பங்கயத்தின் பொன்னியல்காடோர் மணிவரை

மேல் பூத்ததுபோல் மின்னியொளிபடைப்ப வின்னுணுந் தோள்வளையும் மன்னியகுண்டலமு மாரமும் நீண்முடியுந் துன்னு வெயில்விரித்த' மணிமயமான ஒரு தேஜோவிசேஷத்தைக்கண்டு "என்னுடைய கண்களிப்ப நோக்கினேன்" என்கிறபடியே ஸேவித்து விஸ்மிதராய் ப்ரணுமாதிகளைப்பண்ணி, அஜ்ஞனுய் அஶக்தனுய் அப்ராப்தனுன நான் ஹிதமறிந்து செய்யலாவதொன்று மில்லை; ஸர்வபூதஸுஹ்ருத்தான தேவரீரே ஸ்வரூபோசிதமான ஒரு கைங்கர்யத்திலே அடியேனை ப்ரேரித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார். பின்பு பேரருளாளரும் உத்தரவேதியில் அக்னிமத்யத்திலே ஆவிர்ப்பவித்தருளின்வராகையாலே அவ்வௌஷ்ண்யம் கோதிலடியரான இவருடைய அந்தரங்கவ்ருத்தியிலே ஆறுமென்கிற திருவுள்ளக்கருத்தாலே திருவாலவட்ட கைங்கர்யத்திலே யிவரை நியமித்தருளினர். இவரும் அப்படியே "என்னமுதனைக்கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணுவே" என்று போக்யமுமாயிருந்துள்ள தத்திவ்யாவ லோகந ஸந்துஷ்டராய் திருவாலவட்டத்தையே ஸேவித்துக்கொண்டு போந்தார்.

## திருவரங்கத்தில் ஸமாஶ்ரயணம் பெற்றது.

இப்படி நிரந்தரமாக ஆறுமாஸம் ஸ்வசரண கமல பரிசர்யைக பரணராய்ப்போருகிற இவர் முகத்தாலே சில சேதனரை உஜ்ஜீவிப்பிப்போமென்று திருவுள்ளமாய் தேவப்பெருமாள் திருவாய் மலர்ந்தருளி இவருடனே ப்ரஸ்நப்ரதிவசனங்களை நடத்தியருளினர். நம்பியும் இதைக் கண்டு அர்ச்சாவ்யவஸ்தையை அதிக்ரமித்து க்ஷுத்ரனை அடியேனுடன் இப்படி பரிமாறலாமோ என்று விண்ணப்பஞ் செய்ய, பெருமாளும் நாமு மொரு ப்ரயோஜநத்

னைதக் கணிசித்துக் காணும் உம்மை யிங்கே யவதரிப்பித்தது, உமக்கு இதுகொண்டு காரியமில்லை என்றருளிச்செய்ய, நம்பியும் தம்முடைய ஶேஷத்வ காஷ்டையான பாரதந்த்ர்யத்துக்கீடாக அவன் செய்யும் க்ஷேமத்தை யெண்ணித் தெளிவுடையராயிருந்தார். பின்பொருநாள் நம்பியும் ஏகாந்த ஸமயத்திலே பேரருளாளரைக்குறித்து அடியேனுக்கு ஸதாசார்ய ஸமாஶ்ரயண மெங்கே யென்று கேட்க பேரருளாளரும் மிகவும் ப்ரீதராய் நம்முடைய பெரியகோயிலேறப்போய் பெரிய நம்பி புருஷகாரமாகப் பெரிய முதலியாரைத் திருவடி தொழுது அவர் திருவடிகளிலே ஆஶ்ரயியும் என்ன, நம்பியும் மற்றைநாள் விடிவோரேட பேரருளாளரை ஸேவித்து அநுமதிகொண்டு புறப்பட்டு ஜ்ஞாந வர்த்தகமுமாய் புண்யவர்த்தகமுமான திருவரங்கப் பெருநகரைநோக்கிப் பயணகதிகளிலே சென்று திருக்கோவலூரிலே யெழுந்தருளி ஆழ்வார்கள் நயினாரையும் முதலாழ்வார்களையும் ஸேவித்து அற்றைக் கங்கே யெழுந்தருளி யிருந்துமற்றை நாள் புறப்பட்டு மூன்றுநாலு பயணத்திலே யெழுந்தருளி "திசையெல்லாங் கமழும் பொழில்சூழ் திருவெள்ளறை நின்றானே" என்கிறபடியே திருவெள்ளறையிலே சென்று வெள்ளறையுட் கல்லறைமேற் பொன்னையுங் கண்டுகளித்து உள்ளே புகுந்து புண்டரீகாக்ஷனையும் நாச்சியாரையும் ஸேவித்து அற்றைக் கங்கே யெழுந்தருளியிருந்து மற்றை நாள் புறப்பட்டு மண்டிணிஞாலமும் ஏழ்கடலும்நீள்விசும்புங் கழியப் பெரிதான காதலுடனே மஹா நீசனான எனக்கு இந்த மஹாபுருஷார்த்தம் கிட்டக்கடவதோ வென்று எழுந்தருளுகிறபோது தூரத்திலே திருக்கோபுரம் திருமதில்களையுங்கண்டு ஸேவித்துக் கைகூப்பி நிரவதிகமான ஹர்ஷத்தாலுண்டான பாரவஶ்யத்தாலே "உந்திமேல்

நான்முகனைப் படைத்தானுலகுண்டவன், எந்தைபெம்மானிமையோர்கள் தாதைக்கிட மென்பரால், சந்திரனுடு மணியுங் கொழிக்கும் புனற்காவிரி, யந்திபோலு நிறத்தார் வயல்சூழ் தென்னரங்கமே" என்று தொடங்கி "செய்யசாந்துங் கலந்திழிபுனல்சூழ் தென்னரங்கமே" என்றும், "அண்டநாறும் பொழில்சூழ்ந்தழகார் தென்னரங்கமே" என்றும், "முன்றிலைக்கும் செல்வப்புனற் காவிரிசூழ் தென்னரங்கமே என்றும், "செம்பொனாரும் மதில்சூழ்ந்தழகார்தென்னரங்கமே" என்றும், "முன்னலையெடுக்கும் புனற்காவிரிசூழ் தென்னரங்கமே" என்றும், "மறையோர்செஞ்சொல் வேள்விப் புகையுங் கமழுந்தென்னரங்கமே" என்றும், "நற்றேனும் பாலுங் கலந்தன்னவர்சேர் தென்னரங்கமே" என்றும், "ஆயபொன் மாமதில் சூழ்ந்தழகாயதென்னரங்கமே" என்றும், "இந்திரன்பிரமனீசனென்றிவர்களெண்ணில் பல்குணங்களேயியற்ற, தந்தையுந்தாயுமக்களும் மிக்க சுற்றமுஞ் சுற்றிநின்றகலா, பந்தமும் பந்தமறுப்பதோர் மருந்தும் பான்மையும் பல்லுயிர்க்கெல்லாம், அந்தமும் வாழ்வுமாய வெம்பெருமா னரங்கமாநகரமர்ந்தானே" என்றும், "ஆழிவண்ணநின் னடியிணையடைந்தேனணிபொழிற் றிருவரங்கத்தம்மானே" என்றும், "எனக்குமாதல் வேண்டுமென்றடியிணை யடைந்தேனணிபொழிற் றிருவரங்கத் தம்மானே" என்றும், "உன்னடியனேனும் வந்தடியிணையடைந்தேனணி பொழிற்றிருவரங்கத்தம்மானே" என்றும், "அதற்கடியேனஞ்சிவந்துநின்னடியிணை யடைந்தே னணிபொழிற் • றிருவரங்கத் தம்மானே" என்றும், "எனக்குமாக வேண்டுமென்றடியிணை யடைந்தே னணிபொழிற் றிருவரங்கத்தம்மானே" என்றும், "ஆதலால் வந்துன்னடியிணை யடைந்தேனணிபொழிற் றிருவரங்கத் தம்மானே" என்றும்,

"உலகமளந்த பொன்னடியே யடைந்துய்ந்தே னணிபொ ழிற்றிருவரங்கத் தம்மானே" என்றும், இப்படி திருமங் கை மன்னனுடைய பாசுரங்களை யநுஸந்தித்துக் கொ ண்டு வடதிருக்காவேரியிலே நீராடி கேஶவாதி த்வாதச நாமங்களாலே ஊர்த்வபுண்ட்ரங்களையும் ஹரித்ரா சூரண த்தையும் தரித்து அவ்வருகுண்டான அழகிய திருத் தோப்புகளையும் அங்குண்டான திருப்பூமரங்களையும் அவ்வருகிலுண்டான வண்டினமுரலுஞ் சோலைகளையும் அங்கயல்பாய் வயல்களையுங்கண்டு களியா நின்றுகொண்டு "நீரேனொடாமை கேழலரிகுறளாய் முன்னு மிராமனாய்த் தா னாய்ப் பின்னுமிராமனாய்த் தாமோதரனாய்க் கற்கியுமானான் றன்னை" என்கிற தஶாவதாரக்கோவிலையும் "கண்ண புரத்தடியன்கலியன்" என்கிற திருமங்கையாழ்வாரையும் திருவடிதொழுது வடக்குத்திருவாசலாலே ப்ரதக்ஷிண மாக வெழுந்தருளி பெரியநம்பி திருமாளிகையிலே எழுந் தருள அவருங்கண்டு பேரருளாள ருகந்த விஷயமன்றோ வென்றெதிரேவந்து ஸாதரராய் குஶல ப்ரஶ்நம்பண்ண, திருக்கச்சிநம்பியும் அவர் திருவடிகளிலே ஸேவித்து நின்று தாம் வந்தவரத்தை அவருடன் விண்ணப்பஞ்செய்ய பெரியநம்பியுங்கேட்டு மிகவும் இஷ்டராய் அவரையுங் கூட்டிக்கொண்டு மடத்துக்குப் போகிறபோது நம்பிக்கு ஆசார்யப்ரேமங் கனத்திருக்க, பெரியநம்பியும் முன்போய் ஸ்ரீ ஆளவந்தார் கோஷ்டியிலே யெழுந்தருளி பேரருளா ளர் ஸந்நிதியினின்றும் திருக்கச்சிநம்பி யெழுந்தருளி னாரென்று விண்ணப்பஞ்செய்ய, ஸ்ரீ ஆளவந்தாரும் "எண் ணினபலம் எதிரேவந்து வாய்த்த" தென்று அருளிச் செ ய்ய திருகச்சிநம்பியும் ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளிலே தானுந்தடக்கையுங் கூப்பி தண்டன் ஸமர்பித்து திருவடி களைக்கண்ணிலும் திருமுடியிலுந்தரித்து கெடும்போதெ

மூந்திராமலிருக்க ஸ்ரீ ஆளவந்தாரும் ப்ரேம பூர்வகமாக அவரை எடுத்தணைத்து முதலிகளைப்பார்த்து இவர்நித்ய ஸூரிகளிற் றலைவரன்றோ வென்றருளிச்செய்ய, திருக்கச்சி நம்பியும் ''நீசனேன் நிறைவொன்று மில்லேன்'' என்று தம்முடைய நைச்யாநுஸந்தாநத்தை விண்ணப்பஞ்செய்ய ஸ்ரீ ஆளவந்தாரும் திருவிலச்சினையை ப்ரஸாதித்து ஸவிநயரான நம்பியைத் தம்முடைய வலப்புறத்திலே வைத்து திருக்கையாலே ஸ்பர்சித்து மணக்கால் நம்பி திருவடிகளை ஸ்மரித்துக் கொண்டு குருபரம்பரா பூர்வகமாக மந்த்ர ரத்நமான த்வயத்தை ஸாங்கோபாங்கமாக நம்பி திருச்செவியிலேயுபதேசித்துப் பேரருளாளதாஸரென்று தாஸ்ய நாமத்தையும் ப்ரஸாதித்து ஸ்ரீபாததீர்த்தத்தையும் ப்ரஸாதிக்க நம்பியும் த்ருஷ்டராய் ஸகலரஹஸ்யார்த்தங்களையும் ப்ரஸாதித்தருளவேண்டுமென்று ப்ரார்த்திக்க, சிஷ்யலக்ஷணபூர்த்தியுடையரான இவருக்கு ''முமுக்ஷுவாய் ப்ரபந்நனாயிருக்குமவனுக்கு காலக்ஷேபமாவது குருபரம்பரா பூர்வகமாக த்வயத்தை ஸதாநுஸந்தானம் பண்ணுவது,—(த்வயமாவது உபயவிபூதிநாயகனாய் ஸ்ரீய:பதியான ஸர்வேச்வரனும் நாச்சிமாரும் நித்யஸூரிகளுங் கூட எழுந்தருளியிருக்கும் பீடகத் தட்டாயிருக்குமதொன்றாகையாலேயிறே),—என்றும், 'திருவுடை மன்னரைக்காணில் திருமாலைக் கண்டேனே' என்னும் வைஷ்ணவவிஷயத்திலே த்ரிவித கரணங்களாலேயும் அபசாரம் வராதபடி ஆதரவோடே ஸேவித்திருக்கை' என்றும் அருளிச்செய்து இவரை பாகவத நிஷ்டராக்கி அதற்குமேலே 'பீதகவாடைப் பிரானார் பிரமகுருவாகிவந்து' என்றும், 'தேனார்கமலத்திருமகள் கொழுநன்றானேகுருவாகி' என்றும் ஈச்வரன் தானாகச் சொல்லப்பட்ட ஆசார்யனே சிஷ்யனுக்குத்திருநாடு திருப்பாற்கடல் நூற்றெட்டுத் திருப்பதிகளும், அன்னையாயத்த

னுய்என்னும்படியான ஸர்வவிதபந்துவும், மாடும், மனையும், பொருளும், பூமியும் எல்லாம் ஆகக்கடவன்" என்னும் விசேஷார்த்தங்களையெல்லாம் அருளிச்செய்யக்கேட்டு நம்பியும் ப்ரீதராய் எழுந்தருளியிருந்தார்.

அரங்கனுக் காட்செய்ய விரும்பியது.

பின்பு ஸ்ரீ ஆளவந்தார் முதலிகளையும் நம்பியையும் கூட்டிக்கொண்டு புருஷகார பூதையான ஸ்ரீரங்கநாயகியாரை ஸேவித்து ப்ரதக்ஷிணமாக ஆழ்வார் ஸந்நிதியிலே யெழுந்தருளி ஆழ்வாரையும் ஸேவித்து திருமங்கை மன்னனையும் தண்டன் ஸமர்பித்து பெரிய திருவடி நயினாரையும் திருவடிதொழுது உள்ளே புகுந்து ஸ்ரீ பலிபீடத்தடியிலே தண்டன்ஸமர்ப்பித்து ப்ரணவாகாரமான ஸ்ரீ ரங்க விமானத்தையும் ஸேனைமுதலியாரையும் ஸேவித்து அழகிய மணவாளன் திருமண்டபத்திலே சென்று ஜயவிஜயர்களை தண்டன்ஸமர்ப்பித்து உள்ளேபுகுந்து மணற்றூணைப் பற்றி நின்று வயார வாழ்த்தி ப்ரேமபரவசராய் அமலனுதிப்பிரான்படியே "என்னமுதனைக் கண்டகண்கள் மற்றொன்றினைக்காணாவே" என்று பாதாதி கேசாந்தமாக ஸேவித்து திருப்பல்லாண்டை யநுஸந்தித்து நிற்க. பெரிய பெருமாளும் தீர்த்தம் திருமாலை திருப்பரிவட்டம் ஸ்ரீ சடகோபங்களையும் ப்ரஸாதித்தருள, ஸ்ரீ யாளவந்தாரும் நம்பியை ஸகல விரிசைகளுடனே மடத்துக்கு அழைத்துக்கொண்டெழுந்தருளி மத்யாஹ்நத்திலே பெருமாளமுதுசெய் தருளினபின்பு ஸ்ரீபாததீர்த்தத்தை நம்பிக்கு ப்ரஸாதித்து தளிகை ப்ரஸாதத்தையும் ப்ரஸாதித்தருளினர். நம்பியும் அதைஸ்வீகரித்துக்ருதார்த்தராய் பெரியநம்பி திருமாளிகையிலே நித்யஸேவை பண்ணிக்கொண்டு திருவாய்மொழி திருமொழிமுதலான திவ்யப்ரபந்தங்களையும் தத் வ்யாக்யானங்களையும் ஸேவித்துக்கொண்டு

பெரிய நம்பி நம்மையளியநம்பையலென்று அபிமானித்தவ ன்ருயிற்று ஸ்வரூபஸித்தியுள்ளதென்று அறுதியிட்டு அவ ரபிமானத்தை யபேக்ஷித்துக்கொண்டிருக்க, பெரிய நம்பி யும் ஒருநாள் இவரைக்காணுமல் நம்முடைய திருக்கச்சி நம்பி தாஸரெங்கே யென்று கேட்க இதைச் சிலர் திருக் கச்சிநம்பிக்கு அறிவிக்க அவரு மிவ்விசேஷத்தைக் கேட்டு "அடியானிவனென் றெனக்காரருள்செய்யும் நெடி யான்" என்று மிகவும் ஸந்துஷ்டராய் அவர்பின் செல்லஜீ யாளவந்தாரும் இவர் கருத்தறிந்து விடைகொடுத்தருள நம்பியும் மடத்தினின்றும் புறப்பட்டு கோயிலுக் கெழுந்த ருளி பெரியபெருமாளைத் திருவடிதொழுது "பண்டை நான் மறையும் வேள்வியும் கேள்விப்பதங்களும் பதங்க ளின் பொருளும், பிண்டமாய் விரித்த பிறங்கொளி யன லும் பெருகிய புனலொடு நிலனும், கொண்டல்மாருதமுங் குரைகடலேழு மேழுமா மலைகளும் விசும்பும், அண்டமுந் தானாய் நின்றவெம்பெருமா னரங்கமாநகரமர்ந்தானே" என்று துடங்கி "அந்தமும்வாழ்வு மாயவெம்பெருமா னர ங்கமாநகரமர்ந்தானே" என்றும், "அன்னமா யன்றங் கரு மறைபயந்தா னரங்கமா நகரமர்ந்தானே" என்றும், "ஆயி ரந்தோளாலலைகடல் கடைந்தா னரங்கமாநகரமர்ந்தா னே" என்றும், "அங்ஙனேயொக்க வரியுருவானானரங்கமா நகரமர்ந்தானே" என்றும், "ஆயிரஞ்சுடர்வாயரவணைத் துயின்றானரங்கமா நகரமர்ந்தானே" என்றும், "அரிகு லம்பணிகொண் டலைகடலடைத்தா னரங்கமாநகரமர் ந்தானே" என்றும், "ஆழியாலன்றங் காழியைமறை த்தானரங்கமாநகரமர்ந்தானே" என்றும், "ஆயனாயன்று குன்றமொன்றெடுத்தா னரங்கமாநகரமர்ந்தானே" என் றும், "கைம்மானமழைகளிற்றை கடற்கிடந்தகருமணி யை யான்கண்ட தணிநீர்த்தென்னரங்கத்தே" என்றும்,

''கடலேழு மலையேழிவ் வுலகேழுண் டாராதென்றிருந்தானைக் கண்டது தென்னரங்கத்தே'' என்றும், ''ஆனையானைக்கண்டது தென்னரங்கத்தே'' என்றும், யான்கண்டதணிநீர்த் தென்னரங்கத்தே'' என்றும், ''ஆரமுலாயுண்டானைக் கண்டது தென்னரங்கத்தே'' என்றும், ''அஞ்சிறைப்புட்பாகனை யான்கண்டது தென்னரங்கத்தே'' என்றும், ''உலகளப்பானடிநிமிர்த்த வந்தணனை யான் கண்ட தணிநீர்த்தென்னரங்கத்தே'' என்றும், '' அமரர்க்கும் பிரானை கண்டது தென்னரங்கத்தே'' என்றும் ''மைவண்ணங் கருமுகில்போற்றிகழ்வண்ண மரகதத்தினவ்வண்ண வண்ணனை யான் கண்டது தென்னரங்கத்தே'' என்றும், ''பொன்னுமாமணியு முத்தமுஞ்சுமந்து பொருதிரைமாநிதி புடைசூழ்ந் தன்னமாடிலவு மலைபுனல் சூழ்ந்த வரங்கமாநகரமர்ந்தானை'' என்றும், ''இருளிரியச் சுடர்மணிக ளிமைக்கும்நெற்றி யினத்துத்தியணிபணமாயிரங்களார்ந்த, அரவரசப் பெருஞ்சோதி யனந்தனென்னு மணிவிளக்கு முயர்வெள்ளை யணையைமேவி, திருவரங்கப்பெருநகருட் டெண்ணீர்ப்பொன்னித் திரைக்கையாலடிவருடப் பள்ளிகொள்ளும், கருமணியைக்கோமளத்தைக் கண்டுகொண்டென்கண்ணிணைக ளென்றுகொலோ களிக்குநாளே'' என்றும் இந்தப்பாசுரங்களை விண்ணப்பஞ் செய்துகொண்டு பன்னிரிய திருமணற்றூணருகே நின்று பங்கயப்பொற்சேவடியிணையையும் அதிலே வீழையும் கையுமா யெழுந்தருளியிராநின்ற திருப்பாணாழ்வாரையும் கண்டு ஸேவித்துக்கொண்டிராநின்ற திருக்கச்சிநம்பியை பெரியபெருமாளும் க்ருபையாகக் கடாக்ஷித்தருளி நம்பிக்குத்திருமாலை திருப்பரிவட்டம் ஸ்ரீசடகோபமும் ப்ரஸாதிக்க நம்பியும் பெரிய பெருமாளுக்குத் திருவாலவட்டகைங்கர்யம் செய்யலாமாவென்று திருவுள்

ளத்திலே போசிக்க அவ்வளவிலே பெருமாள் திருவாய் மலர்ந்தருளி, 'நம்பி, தெண்ணீர்ப்பொன்னித் திருக்கை யாலடிவருடப்பள்ளிகொள்ளும் அரங்கத்தரவணையில் குளிர்ச்சி தீங்காமலிருப்பதால் சைத்யோபசாரம் நமக்கு வேண்டுவதில்லை ; உத்தரவேதியிலே ஹோமகுண்டத்தில் ஆவிர்ப்பவித்து நிற்கிறேன் அங்கே மஹாஇஷ்டமாயிருக்குமாகையாலே நீர் அவ்விடத்திற்குப்போய் திருவாலவட்ட கைங்கர்யமும் சாலைக்கிணற்றுத் திருமஞ்சனமும் ஸமர்ப்பித்துக்கொண்டு வாரும்' என்று நியமித்தருள, நம்பியும் தண்டன்ஸமர்ப்பித்து விடைபெற்று ப்ரதக்ஷிணமாக வெழுந்தருளி ஸ்ரீரங்கநாச்சியார் ஸந்நிதியிலே சென்று ஸேவித்து ஸகல வரிசைகளையும் பெற்று க்ருதார்த்தராய்ப் புறப்பட்டு மடத்திலெழுந்தருளி ஸ்ரீஆளவந்தார் திருவடிகளிலே தாளுந்தடக்கையுங்கூப்பி தண்டன்ஸமர்ப்பிக்க ஸ்ரீ ஆளவந்தாரும் நம்பியை முடிபிடித்தெடுத்து ஸ்னேஹ பஹுமானத்துடனே கடாக்ஷித்து பேரருளாளர் ஸந்நிதிக்கு எழுந்தருளுமென்று விடைகொடுத்தருள, நம்பியும் ஸ்ரீஆளவந்தாரையும் பெரியநம்பி முதலானோரையும் ஸேவித்து அவர்கள் அநுமதிகொண்டு கோயிலினின்றும் புறப்பட்டு எழுந்தருளினார்.

## சோழநாட்டுப் பெருமாள்களைச் சேவித்தது.

இப்படி எழுந்தருளுகிறவர் சோழமண்டலத்திலே பெருமாள்களையும் திருவடி தொழவேண்டு மென்கிற திருவுள்ளமாய் திருப்பேர் நகரிலே எழுந்தருளி திருக்காவேரியிலேதீராடித்வாதசோர்த்வபுண்டரங்களையுந் தரித்து அவ்விடத்துப் பெரியோர்களையும்ஸேவித்து அவர்கள் புருஷகாரமாக கோயிலிலே சென்று பலிபீடத்தடியிலே ஸேவித்து த்வாரபாலக ரநுமதியுடனே உள்ளே புகுந்து திருமாலிருஞ் சோலைமலையென நின்று "திருமால்வந்தென்னெ

ஞ்சூநிறையப் புகுந்தான், குருமாமணியுந்து புனற்பொன்னித்தென்பால், திருமால்சென்று சேர்விடம்தென்றிருப்பேரே" என்று ஆழ்வார் அருளிச்செய்தபாசுரங்களை விண்ணப்பஞ்செய்து ஸேவித்து நிற்க திருப்பதியார் தீர்த்தம் திருமாலை ஸ்ரீசடகோபம் முதலான வரிசைகளை ப்ரஸாதிக்க நம்பியும் ஹ்ருஷ்டராய் அற்றைக் கங்கேயிருந்து மற்றைநாள் புறப்பட்டு திருக்கண்டியூரிலே சென்று ஹரசாபதீர்த்த பெருமாளை ஸேவித்து அங்குநின்று புறப்பட்டு காவேரிக்கரைக்குடந்தையிலே சென்று கோயிலில் புக்கு ஸ்ரீ ஆராவமுதாழ்வாருடைய ஸௌந்தர்யத்திலே யீடுபட்டு "ஆராவமுதே யடியேனுடலம் ஏரார்கோலந் திகழக்கிடந்தாய் கண்டேனெம்மானே" என்று துடங்கி "வாராயருளாய்வருமென் மாயாமாயாமூர்த்தியாய்.... உனக்காட்பட்டு மடியேனின்ன முழல்வேனோ" என்றும், "நடந்தகால்கள் நொந்தவோ நடுங்க ஞாலமேனமாய், இடந்த மெய்குலுங்கவோ விலங்குமால் வரைச்சுரம், கடந்த கால் பரந்தகாவிரிக்கரைக்குடந்தையுள், கிடந்தவாறெழுந்திருந்துபேசு" என்று திருமழிசையாழ்வார் மங்களாசாஸநம் செய்ய ஆராவமுதனும் எழுந்திருக்கக்கண்டு "வாழிகேசனே" என்று மங்களாசாஸனம் செய்ய அப்படியே எழுந்திருக்கிற அவஸரமாக யாவதாத்மபாவியாய்ஸேவை ஸாதிக்கிற ஸேவையையும் பக்தபராதீனனான அவருடைய வாத்ஸல்யத்தையுங்கண்டு போரவுகந்து திருவடிதொழ ஆராவமுதாழ்வாரும் திருமாலை திருப்பரிவட்டம் ஸ்ரீ சடகோபம் முதலான வரிசைகளையும்ப்ரஸாதிக்க அதுகளைப் பெற்று க்ருதார்த்தராய் ஶார்ங்கபாணி ஸந்நிதிக்கு எழுந்தருளி அவரையும் திருவடிதொழுது ஸகல வரிசைகளையும்பெற்று அங்குள்ள பெரியோர்களையும் ஸேவித்து அற்றைக் கங்கேயிருந்து மற்றைநாள் "நாதனுறைகின்றநகர்

நந்திபுர விண்ணகர நண்ணுமனமே" என்றநுஸந்தித்துக்கொண்டு நாதன் கோயிலுக் கெழுந்தருளி நாதனையும் ஸேவித்து ஸகல வரிசைகளையும்பெற்று அங்குநின்று புறப்பட்டு "வண்டுணுநறுமல ரிண்டைகொண்டு" என்று துடங்கி "ஆண்டாயுன்னைக்காண்பதோ ரருளெனக்கருளுதியேல், வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே" என்று அநுஸந்தித்துக்கொண்டு ஊரிலே சென்று திருவிண்ணகரப்பனையும் ஸேவித்து அங்குநின்றும் புறப்பட்டு "தென்னுடன் குடக்கொங்கன் சோழன் சேர்ந்த திருநறையூர் மணிமாடஞ் சேர்மின்களே" என்கிறபடி திருநறையூரிலே சென்று நாச்சியாரையும் ஸேவித்து நம்பியையும் ஸேவித்து த்ரிராத்ரமங்கே எழுந்தருளியிருந்து அங்குநின்றும் புறப்பட்டு "கண்சோரவெங்குருதிவந்திழிய" என்று துடங்கி "செல்வத்தண்சேறையெம்பெருமான் தாள் தொழுவார்காண்மி னென்தலைமேலாரே" என்றும், "எம்பெருமான் தாள்தொழுவா ரெப்பொழுதுமென்மனத்தே யிருக்கின்றாரே" என்றும், "தண்சேறையெம்பெருமான் தாளையேத்திப், போதோடு புனல்தூவும் புண்ணியரே விண்ணவரிற் பொலிகின்றாரே" என்றும், "தண்சேறையெம்பெருமானும்பாரளும்பேராளன்பேரோதும் பெரியோரை யொருகாலும் பிரிகிலேனே" என்றும், "தண்சேறை யெம்பெருமான் தாளைநாளும் சிந்திப்பார்க்கென்னுள்ளந்தேனூறி யெப்பொழுதுந் தித்திக்குமே" என்றும், "வண்சேறையெம்பெருமா னடியார் தம்மைக், கண்டேனுக்கி தூகாணீரென்னெஞ்சுங் கண்ணிணையுங்களிக்குமாறே" என்றும், "தண்சேறையெம்பெருமான் திருவடியைச் சிந்தித்தேற்கென், ஐயறிவுங்கொண்டானுக் காளானார்க்காளா மென்னன்புதானே" என்றும், "தண்சேறை யெம்பெருமான் தன்னைக், கண்ணாரக்கண்டுருகிக் கை

யாரத் தொழுவாரைக்கருதுங்காலே'' என்றும், ''தண்சேறை யெம்பெருமான் ருளைநாளும் உள்ளத்தேவைப்பார்க்கிது காணீரென்னுள்ள முருகுமாறே'' என்றும் இப்படி ஆழ்வாரும் மடிபிடித்து பாகவத எற்றம் அறிவிக்கும் விஷயமான பரமகாருணிகரான ஸாரஸாதருடைய ஸௌலப்ய ஸௌந்தர்யங்களையு மநுபவித்துநிற்க பெருமாளும் நம்பிக்குதீர்த்தம் திருமாலை திருப்பரிவட்டம் ஸ்ரீஶடகோபம் முதலான வரிசைகளையும் ப்ரஸாதிக்க நம்பியும் ஸகல வரிசைகளையும் பெற்று தண்சேறை எம்பெருமானை தண்டன் ஸமர்ப்பித்து விடைகொண்டு தக்ஷிண துவாரகைக்கெழுந்தருளி ராஜமன்னாரை ஸேவித்து திருக்கண்ணமங்கையில் எழுந்தருளி ''பெரும்புறக்கடலை யடலேற்றினை'' என்று துடங்கி ''கண்ணமங்கையுட்கண்டுகொண்டேனே'' என்று அநுஸந்தித்து பக்தவத்ஸலப்பிரானை ஸேவித்து திருக்கண்ணங்குடியிலே சென்று ''வங்கமாமுந்நீர் வரிநிறப் பெரிய வாளரவினணைமேவி'' என்று துடங்கி ''திருக்கண்ணங்குடியுள் நின்றானே'' என்றநுஸந்தித்து ஸேவித்து அனந்தரம் நாகப்பட்டணத்திலேயெழுந்தருளி ''பொன்னிவர்மேனி மரகதத்தின் என்று துடங்கி ''அச்சோவொருவரழகியவா'' என்று திருநாகை யழகப்பிரானுடைய அழகுகளைப்பெருக்க அநுபவித்து மற்றைநாள் புறப்பட்டு ஆழ்வாருக்குத்தாலிகட்டின இடமான திருக்கண்ணபுரம் புக்கு ஸேவிக்க வேண்டுமென்கிற அபிநிவேஶத்துடனே ஊரருகே சென்று நீராடி, ஊரையும் மாடத்திருவீதியையும் ப்ரதக்ஷிணமாகவந்து அவ்விடத்தில் நித்யவாஸம் பண்ணுகிற பெரியோர்களையும் ஸேவித்து கோயிலிலே புக்கு பலிபீடத்தடியிலே தண்டன் ஸமர்ப்பித்து ப்ரதக்ஷிணமாக வுள்ளேசென்று சவுரிராஜனையும் ஸேவித்து ''சிலையிலங்குபொன்னாழி'' என்றுதுடங்கி ''கருவரைபோ

னின்றானைக் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ" என்றும் "நீணிலாமுற்றத்துநின்றிவணோக்கினாள், காணுமோ கண்ணபுரமென்று காட்டினாள்" என்றும் "செங்கமலநாபனுக்கிழந்தேனென் செறிவளையே" என்றும், "வேதமுதல்வன் விளங்குபுரிநூலன், பாதம் பரவிப் பலரும் பணிந்தேத்தி, காதன்மை செய்யுங் கண்ணபுரத்தெம்பெருமான், தாதுநறுந்துழாய் தாழ்ந்தூதாய்கோத்தும்பீ" என்றும், "கண்ணபுரங்கைதொழும் பிள்ளையைப்பிள்ளையென்றெண்ணப்பெறுவரே" என்றும், "தொண்டருய்யும் வகைகண்டேன் துளங்காவரக்கர் துளங்க" என்று துடங்கி "கண்ணபுரநாந்தொழுதுமே" என்றும், "வானோரளவும் முதுமுந்நீர்" என்று துடங்கி "கானார்புறவில் கண்ணபுரத்தடியேன் கண்டுகொண்டேனே" என்றும், "தெள்ளியீர்தேவர்க்குந் தேவர்திருத்தக்கீர்" என்று துடங்கி "கண்ணபுரந்தொழுதாளிவள், கள்வியோ கைவளைகொள்வதுதக்கதே" என்றும், "கல்லாற் கடலையடைத்தானூர் கண்ணபுரநாந்தொழுதுமே" என்றும், காலாற் சகடம்பாய்ந்தானூர் கண்ணபுரநாந் தொழுதுமே" என்றும், "தொண்டருமமரரும் முனிவரும்தொழுதெழ.....கண்டவர் கணபுர மடிகடமிடமே" என்றும் "கண்ணபுர மென்றுடையானுக் கடியே னொருவர்க் குரியேனோ" என்றும், "வண்டார்பூமாமலர் மங்கைமணநோக்க முண்டானே என்று தொடங்கி "நால்வேதங்கண்டானே கண்ணபுரத்துறையம்மானே" என்றும் "மற்றுமோர்தெய்வமுளதென்றிருப்பாரோ, டுற்றிலேனுற்றது முன்னடியார்க்கடிமை, மற்றெல்லாம்பேசிலு நின்றிரு வெட்டெழுத்துங், கற்று நான் கண்ணபுரத்துறை யம்மானே" என்றும் "பெற்றாருஞ்சுற்றமுமென்றிவை பேணேனான், மற்றாரும்பற்றிலேனாதலால் நின்னடைந்தே, னுற்றானென்றுள்ளத்து வைத்

தருள் செய்கண்டாய், கற்றூர்சேர் கண்ணபுரத்துறை யம்மானே,' என்றநுஸந்தித்து நிற்க சவுரிராஜனும் நம்பிக்குத் திருமாலை திருப்பரிவட்டம் ஸ்ரீசடகோபம் முதலான வரிசைகளையும் ப்ரஸாதித்து விடைகொடுத்தருள நம்பியும் சவுரிராஜனையும் திருக்கண்ணபுரநாயகியையும் ஸேவித்து ஆழ்வாருக்கு அஷ்டாக்ஷரத்தை விளக்கிவிப்பித்த ஸ்தலமன்றோவென்று எழுராத்திரியங்கெழுந்தருளியிருந்து பின்பு சிறுபுலியூருக்கெழுந்தருளிகோவிலிலே சென்று "கள்ள மனம் விள்ளும்" என்று தொடங்கி "கருமாமுகிலுருவா கனலுருவாபுனலுருவா, பெருமால் வரையுருவா பிறவுருவா நினதுருவா, திருமாமகள்மருவும் சிறுபுலியூர் சலசயனத், தருமாகடலமுதே யுனதடியே சரணமே" என்றநுஸந்தித்து அருள்மாகடல்நாயகனுடைய ஸௌசீல்யங்களை நன்றாக அநுபவித்து திருமழிசைப் பிரானுடைய ப்ரபாவத்தை நன்றாக எல்லோருமறியும்படித் தாமே வெளியிட்ட பக்த வத்ஸலனை சலசயனத் தெம்பெருமானுடைய க்ருபைக்குப் போரவுகந்து மூன்றுநாள் அங்கே எழுந்தருளியிருந்து மற்றைநாள் திருவெள்ளியங்குடியிலேசென்று "முடியுடை யமரர்க்கிடர் செயு மசுரர்தம் பெருமானை யன்றரியாய்,மடியிடை வைத்து மார்பைமுன்கீண்ட மாயனார்மன்னிய கோயில்" என்கிற படியே கோலவில்லிராமனைச் சேவித்து அங்கு நின்றும் புறப்பட்டு நாடாளன் கோயிலிலே சென்று "ஒருகுறளாயிருநிலம் மூவடிமண்வேண்டி" என்று துடங்கி "பொருவில்வலம் புரியரக்கன் முடிகள்பத்தும் புற்றுமறிந்தன போலப் புவிமேற்சிந்தச், செருவில்வலம்புரி சிலைக்கைமலைத்தோள்வேந்தன் றிருவடி சேர்ந்துய்க்கிற்பீர் திரைநீர்த் தெள்கி, மருவிவலம்புரிகைதைக்கழியூடாடிவயல் நண்ணி மழை தருநீர்த்தவழ்கால்மன்னி, தெருவில்வலம்புரி தாள

மீனும்காழிச் சிராமவிண்ணகரே சேர்மினீரே'' என்று அநுஸந்தித்து மண்ணளந்ததாடாளனைத் திருவடிதொழுது திருமங்கை யாழ்வாருக்காக இந்த தாடாளன் விசேஷ கடாக்ஷம்செய்து அவருக்கு ப்ரத்யக்ஷமானதும் கலியன் ஸம்பத்தமூர்த்தியை ஜபித்ததும் அன்று முதல் தாடாளன் ஸித்யஸந்நிதி பண்ணி எழுந்தருளியிருந்து எல்லோருக்கும் ஸேவைஸாதித்துக்கொண்டெழுந்தருளியிருக்கிற பக்த பராதீனமான ஸௌலப்யத்துக்கும் ஆச்சர்யப்பட்டு நெஞ்சுருகி கண்பனிப்ப நிற்க தாடாளனும் நம்பிக்குத் திருமாலை திருப்பரிவட்டம் ஸ்ரீசடகோபம் முதலானவரிசைகளையும் ஸாதிக்க அவைகளைப்பெற்று கிருதார்த்தராய் திருவாலி திருநகரியேற எழுந்தருள வேண்டுமென்று குதூஹலத்தையுடையராய்ச்சென்று அவ்விடத்தில் பெரியோர்களையும் ஸேவித்து திருமங்கையாழ்வார் ஸந்நிதியிலே எழுந்தருளி ஆழ்வாரைச்சேவித்து ஆழ்வாரைசூழ்ந்துகொண்டிருக்கிற பதினொரு திருப்பதி யெம்பெருமான்களையும் ஆழ்வார் சேவித்ததுபோலே அந்தந்த ஸ்தலவிஷயமான பாசுரங்களையும் அநுஸந்தித்து ஸேவித்து ஹ்ருஷ்டராய் அங்கு நின்றும் புறப்பட்டு சித்திரகூடத்தேறஎழுந்தருளி ''ஊன்வாடவுண்ணாது துயிர்காவலிட்டு'' என்று தொடங்கி ''தில்லைத் திருச்சித்திரகூடஞ் சென்று சேர்மின்களே'' என்றநுசந்தித்து கோவிந்தராஜனையும் சேவித்து அற்றைக்கங்கே யிருந்து மற்றைநாள் வீரநாராயணபுரத்தேறச் சென்று நாதமுநிகள் மன்னனையும் சேவித்து தமக்குபரமாசார்யரான நாதமுனிகள் யோகத்திலேஎழுந்தருளியிருந்த ஸ்தலத்தையும் சேவித்து அங்கு நின்றும் புறப்பட்டு 'இருந்தண்மாநிலமேனமதாய் வளைமருப்பினி லகத்தடக்கிக் கருந்தண்மாகடற் கண்டுயின்றவனிடமான திருவயிந்திரபுரத்தேறஎழுந்தருளி கருடநதியிலே

நீராடி தருவருமபயத் திருமகளார் தனிக் கேள்வனென்னும் படி திருவடி திருவனந்தாழ்வான் இவர்களுடைய தவப்பலமாய் அடியார்களுக்கு மெய்யனுகிய தெய்வநாயகனையும் ஸேவித்து மற்றைநாள் புறப்பட்டு தமக்கு ப்ராப்ய பூமியான கச்சிநகர்க்கெழுந்தருளவேண்டுமென்கிற த்வரையுடனே எழுந்தருளாநிற்க, "என்னெஞ்சமே யானென் சென்னியான் ஞானவிளை, வன்னெஞ்சங்கீண்ட மணிவண்ணன்–முன்னெஞ்சே, ஊழியாளுழி பெயர்த்தானுலகேத்தும், ஆழியானத்தியூரான்" என்றும் "பிணியவிழ் தாமரை மொட்டலர்த்தும் பேரருளாளர்" என்றும் "தொழுதெழுதொண்டர்கள் தமக்குப் பிணியொழித்து அமரர் பெருவிசும்பருளும் பேரருளாளனெம்பெருமான்" என்றும் இப்படி ஆழ்வார்கள் பாசுரங்களை யநுஸந்தித்துக்கொண்டு ஊரிலே சென்று திருவநந்த ஸரஸ்ஸிலே நீராடி கேசவாதி த்வாதசோர்த்வ புண்ட்ரங்களைச் சாத்திக்கொண்டு பலிபீடத்தருகே தண்டன் ஸமர்ப்பித்து உள்ளே புகுந்து திருவபிஷேகமண்டபத்திலே தண்டன் ஸமர்ப்பித்து ப்ரதக்ஷிணமாக வெழுந்தருளி பெருந்தேவித் தாயாரையும் ஸேவித்து பின்பு வையமாளிகையிலே ஏறி கச்சிக்கு வாய்த்தானென்கிற திருமண்டபத்தை தண்டன் ஸமர்ப்பித்து ஜயவிஜயர்களையும் சேவித்து உள்ளே புகுந்து பேரருளாளரையும் வரதராஜரையும் ஸேவித்து நிற்க, பேரருளாளரும் போரவுகந்து திருக்கச்சி நம்பிக்கு தீர்த்தம் திருமாலை ஸ்ரீசடகோபம் முதலான வரிசைகளை ப்ரஸாதித்தருள நம்பியும் அடியேனுக்கு தாஸ்யநாமம் ப்ரஸாதித்தருளவேண்டுமென்று ஏகாந்தசமயத்திலே விண்ணப்பஞ்செய்ய ஒருவாரணம்பணிகொண்ட வாரணைசலபதியும் அவ்விடத்தில் க்ருபாபரையான பிராட்டியும் ஸ்ரீகஜேந்த்ரதாஸனென்று தாஸ்யநாமம் ப்ரஸாதித்து நமக்கு

அந்தரங்க கைங்கர்யமான திருவாலவட்ட கைங்கர்யத்தை நித்யமாய்ச் செய்துகொண்டிருமென்று நியமித்தருளினர். நம்பியும் 'தங்யோஸ்மி' என்று அந்த கைங்கர்யத்தைச் செய்துக்கொண்டெழுந்தருளியிருந்தார்.

## பெற்றோர்களைப்பார்க்க பூவிருந்தவல்லிக்குச் சென்றது.

இப்படியிருக்கிற நம்பியினுடைய வைபவத்தை பித்ராதிகள் கேட்டு ஸந்துஷ்டராய் பெருமாள் கோயிலிலே வந்து பேரருளாளரை ஸேவித்து நம்பிபாடே சென்று நாங்கள் உம்முடைய வைபவத்தை யறியாமலிருந்தோம், உம்மை யெங்களோடு ஸஜாதீயராக எண்ணி நாங்கள் செய்த குற்றங்களைப்பொறுத்து நம்மூரிலேவந்து ஹிதோபதேசத்தைப் பண்ணிக்கொண்டு இருக்கவேண்டும், நாங்கள் உமக்கு இஷ்டமானபடி நடந்துகொண்டு க்ருதார்த்தராகிறோம் ஊரிலே வாருமென்ன, நம்பியும் இனி அது கூடுமோ அடியேனையன்றி பேரருளாளர் அரைக்ஷணமாகிலும் எழுந்தருளியிரார் ; அடியேனும் பேரருளாளரைப்பிரிந்துஇறைப்பொழுதும்இருக்ககில்லேனென்ன, அவர்களும் அப்படியாகில் ஒருநாளாகிலும் நீர் அங்கே எழுந்தருளிவரும்படி பார்க்கலாமோ என்ன, நம்பியும் அப்படியே யாகிறதென்று அவர்களை ஊருக்கனுப்பிவித்தார். அநந்தரம் ஒருநாள்வரையிலே நம்பியும் இச்செய்தியை பெருமாள் சந்நிதியிலே விண்ணப்பஞ்செய்ய பெருமாளும் அப்படியே செய்வோம், உம்முடைய சப தத்தாலே அவர்களும் உத்தீர்ணராகக் குறையில்லை யென்று அற்றை யிரவில் பெரிய திருவடிமேற்கொண்டு நம்பிக்கும் ஒரு கதிவிசேஷத்தையுண்டாக்கி பூவிருந்த வல்லியிலே அவர்கள் க்ருஹத்திலே எழுந்தருள வீராகவ

ரும் பத்நீ புத்ரஸமேதராய் எழுந்திருந்து ப்ரதக்ஷிண ப்ரணாமாதிகளைப்பண்ணி பகவத்விஷயத்தில் புதியதுண்டறியாத மால்யாபஜீவியான இவன் இப்படி சொல்வதேதென்று பாராசரபகவானாலே கொண்டாடப்பட்ட மாலாகாரனைப்போல 'தந்யோஸ்மி' அநுக்ரஹீதோஸ்மிஎன்று தம்முடைய கார்த்தாத்யத்தை யநுசந்தித்து பெருமாள் திருமுகமண்டலத்தை அநிமிஷரைப்போல சேவித்து தேவரீருக்கு நிருபாதிகசேஷனான இவ்வாத்ம வஸ்துவையும் ஏததநுபந்திகளான சேதநாசேதநங்களெல்லாவற்றையும் தேவரீரே அங்கீகரித்தருளவேண்டுமென்று ஸமர்ப்பித்து, இருள் தருமாஞாலத்துளிருப்பையொழித்து நலமந்தமில்லதோர் நாட்டிலே அந்தமில் பேரின்பத் தடியருடனே சேர்த்தருளவேண்டுமென்று சரணம் புக, பெருமாளும் அப்படியே செய்கிறோமென்று தலை குலுக்கி அந்த தனகநகாபரணங்களெல்லா வற்றையும் விநதை சிறுவன்மேல் வைத்து பொன்மலையின் மீதே. காளமேகம்போல செழும் பறவைதானேறி நம்பியுடனே ஸ்ரீஹஸ்திகிரி ஸிகரத்தில் வையமாளிகையிலே எழுந்தருளினார். இப்படி இளையபெருமாளைப்போலநிரதிஸயமான ப்ராவண்யத்தாலே இடைவிடாமலிருந்து அடிமை செய்கிற நம்பி திறத்தில் பேரருளாளரும் அப்படியே அன்புகூர்ந்திருந்தார். இவருடைய மாதாபிதாக்களுக்கும் அவர்கள் பிரார்த்தித்தபடியே முக்தியை ப்ரஸாதித்தருளினார். நம்பியும் அங்கிருந்து வந்த தநங்களையும் ரத்நங்களையும்கொண்டு தேவப்பெருமாளுக்கு அனேகதிவ்யாபரணங்களைப் பண்ணி ஸமர்ப்பித்து ஸேவியாநின்றுகொண்டு ஹ்ருஷ்டராயிருந்தார்.

---

## இராமாநுசர் சரித்திரம்.

அந்தகாலத்தில் எம்பெருமான் வேதாந்த ஸூத்ரத்துக்கு ஸ்ரீபாஷ்யமுகத்தாலே ஸமீசீநார்த்தங்களை தெளிவிக்கைக்காக திருவனந் தாழ்வானை ஸ்ரீபெரும்பூதூரில் ஆஸூரிகுலதிலகரான கேசவஸோம யாஜிகளுக்கு கலியுகத்தில் ௪௧௧௯-வதான பிங்களஹஸம்ஸித்திரைமீ திருவாதிரை நக்ஷத்திரத்தில்குமாரராயவதரிப்பித்தான். இச்செய்தியை பெரிய திருமலைநம்பியுங்கேட்டருளி ஸ்ரீபெரும்புதூரேற வெழுந்தருளி கேசவஸோமயாஜியாரையுங் கண்டு மகிழ்ந்து அந்த பிஸு-வையுங் குளிரக்கடாக்ஷித்தருளி அந்த பிஸு-வின் முகவொளிவைப்பார்த்து "லக்ஷமணோலக்ஷ்மிஸம்பந்ந:" என்கிறபடியாயிறேயிருப்பது ஆகையாலே இளையபெருமாள் திருநாமமே தகுமென்று ராமாநுஜன் என்று திருநாமஞ்சாத்தி ரக்ஷார்த்தமாகத் திருவிலைச்சினையும் ப்ரஸாதித்து இளையாழ்வாரென்றுங்கொண்டாடி திருமலையேற வெழுந்தருளினார். கேசவ ஸோமயாஜியாரும் அவருக்கு ஜாதகர்மாதிகளை யதாகாலத்தில் அநுஷ்டித்து உபநயநமநந்தரம் ஸாங்கோபாங்கமாக வேதாத்யயநத்தைப்பண்ணிவைக்க, இளையாழ்வாரும் ஷோடஸவார்ஷிகரானவாறே க்ருஹஸ்தாஸ்ரமத்தையு மங்கீகரித்தருளி, பெருமாள் கோயிலிலேயாதவப்ரகாஸ னென்பானொருவன் ஏகதண்டிசந்யாஸியாய் பூர்வபக்ஷம் வாசிப்பிக்கிறானென்று கேட்டருளி அங்கேற வெழுந்தருளி அவன் பக்கல் பூர்வபக்ஷம் வாசிக்கத்தொடங்கினார். அப்படி வாசித்துக்கொண்டுவரும்போது கர்மகாண்ட வாக்யங்களிலும் ப்ரஹ்ம பாகவாக்யங்கள் ப்ரஸக்தங்களாக அதுகளில் அவன் சொல்லுகிற அதிகரணார்த்தங்களை யெல்லாம் ஸமாநாதி கரணங்களாக்குகிற இவருடைய ஸாமர்த்யத்தைக்கண்டு இவரை முடிக்க

வேண்டுமென்று கோரி அந்த மாயிஸகயாவி யிவரைக் கூட்டிக்கொண்டு கங்காயாத்ரை செய்தவிடத்திலே பஹு தூரம்போனபின்பு ஒருநாள் ஓர் மஹாடவியிலே சௌசார்த்தமாக இளையாழ்வார் நின்றவாறே, கோவிந்தபட்டரென்பவர் இவர்களுடைய துராலோசனையை அறிவித்து அகன்றுபோகச்சொல்ல, இளையாழ்வாரும் வழியைவிட்டு ஒரு மரத்தடியில் நின்றுபார்க்க அவ்விடமும் மஹாடவியாயிருக்க "ஆவாரார்துணை" என்று பக்கம் நோக்கி நிற்க பேரருளாளனும் பெருந்தேவித்தாயாரும் வில்லியும் வில்லிச்சியுமாய் வந்துநிற்க, அவர்களை நீங்களெங்கேறப் போகிறீர்களென்று இளையாழ்வார் கேட்க, அவர்களும் காஞ்சீபுரத்தேறப்போகிறோமென்றவாறே என்னையும் அங்கு சேர்க்ககடவீர்களென்ன, அவர்களும் முன்னேயேக இளையாழ்வாரும் பின் சென்றவாறே அந்த வில்லியை இங்கு தண்ணீருண்டோவென்று வில்லிச்சிகேட்க, வில்லியும் அருகேயிருக்கிறதென்று ஒருகிணற்றைக்காட்ட இளையாழ்வாரும் அதுகேட்டுநமக்குபரமோபகாரிகளான இவர்களுக்கு நாம் தண்ணீர் கொடுக்கவேண்டுமென்று நிச்சயித்து அந்தக்கிணற்றிலே யிறங்கி அவர்களுக்குத் தண்ணீரெடுத்துக்கொடுக்க, அவர்களும் பானம்பண்ணி இதுவே புண்யகோடி விமானங் காணுமென்று சொல்லி அந்தர்த்தானமாகப் போய்விட்டார்கள். இளையாழ்வாரும் கரையேறி கீழ்வானம் வெளுத்தமையையும் அருகே புண்ணியகோடி விமானத்தையுங்கண்டு இதென்ன ஆச்சர்யமென்று மகிழ்ந்து கணையாழிகண்ட பிராட்டிபோலே சந்தோஷித்து "எத்திறம்" என்று ஆழ்வார்மோஹித்தாற்போலே இவ ரொருவருமே பேரருளாளரென்றும், "எம்மாபாவியேற்கும் விதிவாய்க்கின்று வாய்க்குங்கண்டீர்" என்று மோஹித்துக்கிடந்து பின்பு தாமே தேறி நித்ய

கர்மாநுஷ்டானங்களை அங்கருகே யிருந்த வொருதடாகத்தில் செய்தருளி பேரருளாளனையும்பெருந்தேவியாரையும் திருவடிதொழுது ஆனந்தபரிதராய் எழுந்தருளியிருந்தார். அங்கே யாதவ ப்ரகாசனும் இளையாழ்வாரைத் தேடிக்காணமல் காட்டிலே நசித்திருப்பரென்று உண்மகிழ்ந்து சென்று கங்கையாடி மீண்டும் பெருமாள்கோயிலேறப்போந்து இளையாழ்வாரை அங்கே கண்டு மிகவும் சந்தோஷித்து உம்மைக்காட்டில் பறிகொடுத்தோமென்று நிர்வேதப்பட்டிருந்தேன். இங்கு கண்டபின்பு சந்தோஷமுண்டாயிற்று, நீர் வந்த ப்ரகார மென்னென்று கேட்க, இளையாழ்வாரும் வில்லி வ்ருத்தாந்தத்தை யடங்கச் சொல்ல, அவனும் இவர் ப்ரபாவம் சர்வாதிஸயிதமாயிருந்ததென்று பேரப்ரீதனாய் ஸ்வகோஷ்டியிலே சேர்த்துக்கொண்டு வாசிப்பித்து நிற்க, இரண்டு ஸ்ரீ வைஷ்ணவர்கள் பெருமாள் கோயிலினின்றும் புறப்பட்டு கோயிலேறச்சென்று நம்பெருமாளைத் திருவடிதொழுது ஆளவந்தார் திருவடிகளிலே சேவித்து நிற்க, ஆளவந்தாரும் பெருமாள் கோயிலிலே யென்ன விசேஷமென்று கேட்டருள, அவர்களும் எல்லாரும் ஆச்சர்யப்படும்படியாய் இளையாழ்வார் பக்கல் பேரருளாளன் வில்லிவ்யாஜேன விசேஷ கடாக்ஷம்பண்ணிப் போந்ததை சவிஸ்தாரமாக விண்ணப்பஞ் செய்து யாதவப்ரகாச வ்ருத்தாந்தத்தையும் இப்போது இளையாழ்வார் அவன் பக்கல் வாசிக்கிறாரென்றும் விண்ணப்பஞ்செய்ய, ஆளவந்தாரும் கேட்டருளி பெரிய பெருமாளிடத்தில் பண்ணின ப்ரபத்தி பலமாயிற்று "ஒழிவில் காலமெல்லாம்" என்கிற திருவாய்மொழியில் ஈடுபட்ட பெரிய திருமலை நம்பியைக்கொண்டு திருவேங்கடமுடையானும் இத் தர்ஸனத்தை நிலைநிறுத்தும்படி பண்ணியருளினார். பேரருளாளர் தாமும் பிராட்

டிபு முன்னடந்து இளையாழ்வாரைத் திருவுள்ளம் பற்றித் தாமேவழி நடத்தி, தம்மிருவரையுந் திருவடி தொழுது "பத்ரம் புஷ்பம் பலம் தோயம்" என்கிறபடியே அவர் கொடுத்த தண்ணீரமுதையும் அமுதுசெய்து உள்குளிர்ந்து திருவுள்ளம்பற்றி யருளினர். கோயில் திருமலை பெருமாள் கோயிலெம்பெருமான்கள் மூவரும் இளையாழ்வாரிடத்தில் விசேஷ கடாக்ஷம்பண்ணி யிருப்பதால் இவரே பித்தாந்த நிர்வாஹகரென்று போரவுகந்து "பல்லாண்டு பல்லாண்டு" என்று பெரிய பெருமாளை மங்களாசாசநம் செய்தருள முதலிகளுங்கேட்டு விசேஷார்த்தங்களை நெஞ்சில் கொண்டிருக்க, ஆளவந்தாரும் நம்பெருமாளிடத்தில் விண்ணப்பஞ்செய்து இளையாழ்வாரைக் கடாக்ஷித்தருளுகைக்காக முதலிகளோடே திருக்கோவலூர் வழியாக பெருமாள் கோயிலே றவெழுந்தருளி எதிர்கொண்டு வந்த திருக்கச்சி நம்பியின் வந்தனையுகந்து பேரருளாளனையும் பெருந்தேவியாரையுந் திருவடிதொழுது ப்ரதக்ஷிணமாக வெழுந்தருளி கரியமாணிக்கத்தாழ்வாரை சேவித்து சக்ரவர்த்தித் திருமகனையும் திருவடிதொழுது வழிதிகைத்து உள்நடுங்கி "ஆவாரார் துணை" என்று ரக்ஷகனைத்தேடின இளையாழ்வாருக்கு கண்காணத்தோன்றி சர்வபய நிவ்ருத்தபுரஸ்ஸரமாக சர்வபலப்ரதனை தேவரீரே வாழ்வித்தருளினபடியாலே இளையாழ்வாரென்கிற திருநாமம் யதார்த்தமாயிற்று. இனிமேலும் ரக்ஷித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்து நிற்க, அப்போது யாதவப்ரகாசனும் வித்யார்த்திகளோடே பெருமாளை ஸேவித்து ப்ரதக்ஷிணம்பண்ண ஆளவந்தாரும் இளையாழ்வா ராரென்று கேட்க, அங்குள்ளாரும் அவரென்று ஒருவரை நிர்தேசித்துக்காட்ட ஆளவந்தாரும் தந்தாமரைக் கண்களாலே குளிர நோக்கியருளி பேரருளாளன்

திருவடிகளிலே இளையாழ்வார் இந்த ஸித்தாந்த நிர்வாஹகராகவேண்டுமென்று ப்ரபத்திபண்ணி, இளையாழ்வாரைக்கண்டு நாம் வார்த்தைசொன்னால் பூர்வபக்ஷம் வாசிக்கிறதற்கு விரோதமாமென்று திருவுள்ளம்பற்றி மீண்டும் முதலிகளுந் தாமுமாகக் கோயிலேற வெழுந்தருளினார்.

## நம்பிகள் இளையாழ்வாருக்குச் சாலைக்கிணற்று நீர் சமர்ப்பிக்கிற தொண்டு நியமித்தது.

பின்பொருகால்இளையாழ்வாரும்யாதவபிரகாசனுக்கு எண்ணெய்தேய்க்கிற சமயத்திலே அவனொருஉபநிஷத்துக்கு அபார்த்தத்தைச் சொல்ல அதைக்கேட்டு இவருக்கு கண்கலங்கி சோகாஸ்ருக்கள் அவன் துடையிலேவிழ அதுகளினுடைய ஔஷ்ண்யத்தைக்கண்டு நம்முடைய பரிஸரத்திலே நீர்வரவேண்டாமென்று சொல்ல அதைக்கேட்டு இவரும் நம்பிக்கு விண்ணப்பஞ்செய்து அடியேனுக்குஒரு ஹிதமான கைங்கர்யத்தை நியமித்தருளவேண்டுமென்ன நம்பியும் சாலைக்கிணற்றில் திருமஞ்சனத்தை நித்யமாகப் பேரருளாளருக்கு ஸமர்ப்பித்துக்கொண்டு வாரீரென்ன அந்த கைங்கர்யத்தையே செய்துக்கொண்டிருந்தார்.

## நம்பிகள் பிரபாவத்தை இளையாழ்வார் அறிந்தது.

அனந்தர மொருநாள் கச்சிக்கு வாய்த்த திருமண்டபத் தருகேயிருந்து நம்பி இளையாழ்வாருக்கு பகவத்வைபவத்தை அருளிச்செய்துகொண் டெழுந்தருளி யிருக்க அந்த ஸமயத்திலே பேரருளாளப் பெருமாளும் பெருந்தேவித்தாயாரும் அர்ச்சாஸமாதியை அதிக்ரமித்து விபவாவதாரம்போலே ஒருவர்க்கொருவர் வார்த்தை யருளிச்செய்துகொண்டு திருக்கைகளைக்கோத்துக்கொண்டு கச்சிக்கு வாய்த்தான் மண்டபமான வையமாளிகையில் உலாவி

யருளாநிற்க நம்பியும் அந்த திவ்யதம்பதிகளைக்கண்டு அடிக்கடி பத்தாஞ்ஜலிபுடரா யெழுந்திருக்கிறபடியைக்கண்டு இதென்னவென்று இளையாழ்வார் கேட்க நம்பியும் "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக் கண்டசதிர்கண்டொழிந்தேன்" என்று மயர்வறுமதி நலமருளப்பெற்ற ஆழ்வாருக்கு ப்ரத்யக்ஷ ஸாக்ஷாத்காரமாக ஸேவை ஸாதித்ததுபோல் "பொருளல்லாத வென்னைப்பொருளாக்கி யடிமைகொண்டாய்" என்கிறபடியே ஸ்ரீயாமுனாசார்யருடைய திருவடி ஸம்பந்தத்தாலே யென்னைப்பொருளாக க்ருபைசெய்தருளி பேரருளாளரும் பெருந்தேவித் தாயாரும் வையமாளிகையில் உலாவி யருளி ஸேவைஸாதித்தால் அடியே னெப்படி யெழுந்திராம லிருக்கிறது என்று ஸாதிக்க, இளையாழ்வாரும் நம்பியினுடைய வைபவ மிருந்தபடியைக்கண்டு விஸ்மிதரானார்.

## நம்பிகள் ஆசாரியர் மரணத்தை அறிந்தது.

அக்காலத்தில் திருவரங்கன் றிருப்பதியிலே எழுந்தருளி யிருக்கும் யாமுனாசார்யரும் பெரியநம்பியை யழைத்தருளி திருக்கச்சிநம்பி நியமித்தபடியே இளையாழ்வார் திருமஞ்சன கைங்கர்யத்திலே நிரதராயிராநின்றாரென்று சொல்லுகிறார்க ளாகையால் நீரிப்போது பேருளாளர் சந்நிதிக்குப்போய் அங்கே யிளையாழ்வார் சாலைக்கிணற்றினின்றும் திருமஞ்சனங்கொண்டு வருகிறவழியிலேயிருந்து கொண்டு நாம் சொன்ன ஸ்தோத்ரத்தை அவர் செவிப்படச் சொல்லுமென்று நியமித்தருளினார். பெரியநம்பியும் ஆசார்ய நியமனப்படியே கோயில் நின்றும் புறப்பட்டு திருவெள்ளறை வழியாகத் திருக்கோவலூரிலேயெழுந்தருளி பெருமானை ஸேவித்து பெருமாள் கோவிலுக்கெழுந்தருளி பேரருளாளரையும் பெருந்தேவித்தாயாரையும் ஸேவித்து

தம்முடைய ஆசார்யரான ஸ்ரீயாளவந்தார் திருவுள்ள ப்ர காரம் இந்த இளையாழ்வாரை இத்தர்சன ப்ரவர்த்தக ராம்படி தேவரீர்செய்தருள வேண்டுமென்று வரதராஜன் சந்நிதியில் ப்ரபத்திபண்ணி ஆசார்ய நியமனத்தை சிர ஸாவஹித்துக்கொண்டு சாலைக்கிணற்றுவழிக் கெழுந்தரு ளி ஸ்ரீயாளவந்தா ரருளிச்செய்த சதுஶ்லோகியையும் ஸ் தோத்ர ரத்நத்தையும் அநுஸந்தித்துக்கொண்டு நிற்க, இளையாழ்வாரும் சாலைக்கிணற்றிலிருந்து திருமஞ்சனங் கொண்டு எழுந்தருளுகையில் ''ப்ரஹ்ம சிவஶ்ஶதமக : பரமஸ்ஸ்வராடித்யேதேபி யஸ்யமஹிமார்ணவ விப்ருஷஸ் தே'' என்கிற சுலோகத்தைக்கேட்டு ஆனந்தபரவசராய் அப்போதே பெரியநம்பிகளை ஸேவித்து இஃதாரருளிச்செ யலென்று கேட்க பெரியநம்பியும் ஸ்ரீயாளவந்தார் திவ்ய ஸூக்தியென்று அருளிச்செய்ய, அப்படிக்கொத்த மஹா நுபாவரை அடியேன் ஸேவிக்கவேண்டுமென்ன, பெரிய நம்பிகளும் ஆராமஞ்சூழ்ந்த வரங்கமான போகமண்டபத் திலே பெரியபெருமாள் ஸந்நிதியிலே அந்த ஸ்வாமி தர்ச னப்ரவர்த்தகரா யெழுந்தருளியிருக்கிருரென்று அருளிச் செய்ய, இளையாழ்வாரும் திருமஞ்சன தீர்த்தக்குடத்தைக் கொண்டுவந்து பேரருளாளர் ஸந்நிதியிலே ஸமர்ப்பித்து திருக்கச்சிநம்பி பக்கல் சென்று ஸ்ரீயாளவந்தார் இரண் டாற்று நடுவே பெரிய பெருமாள் ஸந்நிதியில் எழுந்தருளி யிருக்கிருராம், அவரை அடியேன்கண்டு தண்டன் ஸமர் ப்பித்து மீண்டு வருகிறேன் தேவரீர் நியமிக்க வேண்டுமெ ன்ன, அப்படியே செய்யுமென்று நம்பியும் விடைதர, தே வப்பெருமாள் ஸந்நிதியிலும் தண்டன்ஸமர்ப்பித்து பெரிய நம்பிகளுடனே ஆனந்தித்துக்கொண்டு எழுந்தருள, பெ ரியநம்பிகளும் ஆசார்ய நியமன ப்ரகாரம் அதிஶீக்ரமாக இளையாழ்வாரை யழைத்துக்கொண்டு வடதிருக்காவேரி

வடகரைக்கு எழுந்தருள தென்கரையிலே திரளாக கோஷ்டியைக்கண்டு அங்கே புக ஸ்ரீயாளவந்தார் பரமபதத்துக் கெழுந்தருளி திருப்பள்ளி படுக்கிற ஸமயமாக இருக்கக்கண்டு ஸ்ரீயாளவந்தார் திருமேனி ஆபாத மஸ்தகமாக ஸேவித்து விமல சரமவிக்ரஹத்தை யிளையாழ்வார் நெஞ்சுள்ளும் கண்ணுள்ளும் நீங்காமல் ஸ்தாபித்துக்கொண்டு அப்போது ஸ்ரீயாளவந்தார் மூன்று திருவிரல்களை முடக்கிக்கொண் டெழுந்தருளியிருக்க அந்தக் கருத்தறிந்து அந்தக்கருத்துப்ரகாரம் தாமே தலைக்கட்டுவதாக விண்ணப்பம் செய்ய அம்மூன்று திருவிரல்களும் நிமிர்ந்தன. பின்பு இளையாழ்வார் வெறுத்து நம்பெருமாள் ஸந்நிதிக்கு உள்ளேபுகாமல் வந்தவழியே யெழுந்தருளி அத்தியூரிலே சென்று நடந்த ஸவிஸ்தாரத்தை திருக்கச்சிநம்பிக்கறிவிக்க நம்பியும் மிகவும் சோகித்து ஸ்ரீசூர்ணபரிபாலநாதி திருவத்யயநாந்தமாக கைங்கர்யங்களை நடத்தியருளிபேரருளாளர் ஸந்நிதியிலே கைங்கர்யத்தை யதாபூர்வமாக நடத்திக்கொண்டு போந்தார்.

## நம்பிகள் இராமாநுஜருக்கு ஆறுவார்த்தை அருளியது.

பின்பொருநாள் நம்பியும்ஸர்வேச்வரனுடைய ஸ்வரூபரூபகுணப்ரப்ருதிகளையும் ஸர்வஜ்ஞத்வ ஸர்வஸக்தித்வாதிகளையும் பரக்கப்பேச இளையாழ்வார் நம்பியைப்பார்த்து அடியேன் சிலநினைவுகளை நினைத்திருக்கிறேன் அவைவெவை என்று பேரருளாளர் ஸந்நிதியிலே விண்ணப்பம்செய்து அத்தலையில் நியமனத்தை அடியேனுக்கு ப்ராஸாதித்தருளவேண்டுமென்ன, நம்பியும் மறுநாள் பேரருளாளர் ஸந்நிதியில் திருவாலவட்ட கைங்கர்யஞ் செய்துகொண்டிருக்கும்போது பெருமாளும் நம்பிநம்மோ டொருவார்த்தை கேட்க இச்சையுடையவராகத் தோற்றுகிறதே யென்ன,

நம்பியும் ''காயிக்தே, பையை யுடையவனுக்கு சரக்கிருப்புத்தெரியாதா? தேவரீர் ஸர்வஜ்ஞர், ஸர்வசியக்தா, ஸர்வாந்தர்யாமி; தேவரீ ரறியாததொன்றுண்டோ'' என்ன, பெருமாளும் திருவுள்ள முவந்து, ஸ்ரீமானனை நாமே பரதத்வம்—(க), நம்முடைய மதம் பேதம்—(உ), ப்ரபத்தியே உபாயம்—(ங), அந்திமஸ்ம்ருதி ஆவசியகமன்று—(ச), சரீராவஸாநத்தில் மோக்ஷம்—(ரு), பெரியநம்பி திருவடிகளிலே ஆச்ரயிப்பது—(சா), என்று ஆறுவார்த்தைகளை யருளிச்செய்து இதை யவருக்கு அறிவியுமென்ன, நம்பியும் இளையாழ்வாரை யழைத்து பெருமாள் ஸாதித்த இவ்வர்த்தங்களை நன்றாக அருளிச்செய்து, இப்படி அறியாதன வறிவித்த பேரருளாளருடைய மஹாக்ருபையை அறிந்து, ஸாதுபரித்ராணமாயும் லோகோபகாரமாயுமிருக்கிற இப்படிக்கொத்த அபூர்வார்த்தங்களை ப்ரச்னை செய்த இளையாழ்வார் லோகரக்ஷணார்த்தமாக அவதரித்த மஹாபுருஷரென்கிற கௌரவத்தையுந் தந்திருவுள்ளத்திற்கொண்டு இளையாழ்வாரைக்கண்டு விஸ்மயப்பட்டு 'இளையாழ்வாரே நீர் கேட்ட ப்ரசினைக்கு பெருமாள் ஸாதித்த அர்த்தமிதுவாகில் பெருமாள் திருவுள்ளமும் உம்முடைய ஹ்ருதயமும் ஏககண்டமாயிருந்தது என்னே' என்ன, இளையாழ்வாரும் எல்லாந் தேவரீர் ப்ரபாவந்தானென்று விண்ணப்பஞ்செய்தார்.

## நம்பிகள் இராமாநுஜர் மாளிகையில் பிரசாதம் கொண்டது.

அன்று மத்யாஹ்நத்தில் தம்முடைய திருமாளிகையிலே பேரருளாளருக்குத் திருவாராதனத்தைச் செய்துதளிகையுங் கண்டருளச்செய்து நம்பியை எழுந்தருளப்பண்ணி அமுதுசெய்விக்க வேண்டுமென்று தென்னண்டை மாடவீதியாலே தேவப்பெருமாள் ஸந்நிதியேற

வெழுந்தருளா நிற்கச்செய்தே பேரருளாளர் நம்பியை யழைத்தருளி இளையாழ்வார் சில எண்ணங்கொண்டு உம்மை தம்முடைய திருமாளிகைக்கு அழைக்கவருகிறார். நீர் அவர் வருவதற்கு முன்னதாய் அவர் திருமாளிகைக்குச் சென்று அவர் தேவிகளைக்கேட்டு ப்ரஸாதம் ஸ்வீகாரம் செய்து வாருமென்று நியமிக்க, நம்பியும் வடக்கு மாடவீதி வழியாக இளையாழ்வார் திருமாளிகைக் கெழுந்தருளி அவருடைய தேவியாரைக்கண்டு ப்ரஸாதம் சாதிக்கவேண்டுமென்ன, தேவரீரைத்தேடிக்கொண்டெழுந்தருளின எங்கள்பெருமாள் எழுந்தருளட்டும் என்று இளையாழ்வார் தேவிகள் விண்ணப்பம் செய்ய, நம்பியும் அடியேனுக்கு பஹு-க்ஷ-த்தாயிருக்கிறது. மேலும் ஸ்வாமி சந்நிதி கைங்கர்யம் அப்யந்தரமா யிருக்கிறது. ஆகையாலுங்கள் பெருமாள் எழுந்தருளுகிறவரைக்கும் அவகாஸம் இல்லையென்று சாதிக்க, இளையாழ்வார் தேவிகளும் ஆகில் தேவரீர் அமுதுசெய்யுமென்று ப்ரஸாதம் ஸாதிக்க நம்பியும் அமுதுசெய்து அதித்வரையாக ஸந்நிதிக்கெழுந்தருளினார். இளையாழ்வாரும் ஸந்நிதியில் விசாரித்து நம்பியைக்காணாமல் தந்திருமாளிகைக் கெழுந்தருளி தேவிகளை விசாரிக்க நம்பி அமுதுசெய்தெழுந்தருளினாரென்று கேட்டு சந்துஷ்டராய், தேவிகள் நீராடி நிற்கக்கண்டு ஏன் நீராடினையென்றுகேட்க, வைசியத்திருமேனியான நம்பிகள் அமுதுசெய்த இடத்தை ஸ்தலசுத்தி பண்ணினதில் ஒரு துளிஜலம் அடியேன்மீது தெறித்ததினாலே தீர்த்தமாடினேனென்ன அதுகேட்டு இளையாழ்வார் குபிதராய் நம்பியை நான் சன்மானம்பண்ண நினைக்க அதைவிட்டு நீ அவரை ஸ்வல்பராக நினைத்து ஸ்நானம்பண்ணி வந்தாயாகையால் உன்பேரில்இது முதல் தப்பு என்று கோபித்துக்கொண்டுபிற்பாடு நம்பி சந்நிதிக்

கெழுந்தருளி அவரை உபலாளித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

## நம்பிகள் பெருமாளுக்கமுதூட்டியது.

பின்பொருநாள் தேவப்பெருமாளுக்கு நித்யப்படி ஷட்ரஸோ பேதமான ப்ரசாதங்களை சந்நிதியில் திருமுன்பே ஸ்வயம்பாகிகள் ஸமர்ப்பிக்க அர்ச்சகர் சுத்தோதகத்தாலே வேதோக்த மந்த்ரங்களாலே ப்ரோக்ஷித்து ஸமந்த்ரகமாக அமுதுசெய்தருளப் பண்ணப்புக, ஆஸ்ரிதருடைய கரஸ்பர்சமுள்ள த்ரவ்யமே தமக்கு தாரகமென்று தோற்றுகைக்காகவும் நம்பி திறத்தில் தம்முடைய வாத்ஸல்யாதிசயத்தை வெளியிடுகைக்காகவும் நம்பியை யழைத்தருளி, வாரீர் நம்முடைய முன்பே வைத்திருக்கிற ப்ரஸாதத்தை உம்முடைய கையாலே யெடுத்துத் தரவல்லீரோ வென்று பெருமாளருளிச்செய்ய, நம்பியும் நாயிந்தேன் தேவரீ ரிப்படி யருளிச்செய்யலாமோ, இது உலகத்துக்கும் வேதமார்க்கங்களுக்கும் சேருமோ வென்ன, பெருமாளு மிவரை வெறுத்து நிர்ப்பந்தித்து நியமித்தருள, ஸர்வ சேஷியினுடைய நிரங்குசஸ்வாதந்த்ரியத்துக்கு அஞ்சிப் பயந்துகொண்டு தம்முடைய திருக்கையாலே ப்ரஸாதவகைகளை யெடுத்து ஸமர்ப்பிக்க உலகமுண்டபெருவாயாலே ப்ரஸாதங்களை யெல்லாம் அமுதுசெய்தருளினர். அர்ச்சகர்களும் கண்டே யிருந்தார்கள்.

பின்பொருநா ளிரவிலே க்ஷீராக்கமும் குழம்புப் பாலும், சைத்யோபசாரமாக வாஸனை த்ரவ்யம் சேர்த்த ஸ்ரீகந்தமும், பரிமள த்ரவ்யம் சேர்த்த அடைக்காயமுதும் சேர்த்தியில் சாத்திக்கொள்ள சிறு செண்பகம் ஜாதி செங்கழுநீர் முதலிய புஷ்பங்களும் கொண்டுவந்து பீகமுத்ரை சமயத்தில் ஸமர்ப்பித்து அமுது செய்யப்பண்ண

வந்த அர்ச்சகரை இதெல்லாவற்றையும் நீர் வெறுமை வைத்து பீக முத்ரை பண்ணிக்கொண்டு போமென்று நியமிக்க, அப்படியே வைத்து பீகமுத்ரை பண்ணிக் கொண்டு போனபின்பு நம்பியை யழைத்து அவரைக் கொண்டு ஆப்ரிதகரஸ்பர்ஸமே தாரகமாக புஷ்பத்தை ஸமர்ப்பிக்கச்சொல்லி சாத்துபடியையும் சாத்திக் கொண்டு ப்ரஸாதத்தையும் குழம்புப்பாலையும் முக்கால் வரிசை அமுதுசெய்து நம்பிக்குக் கொஞ்சம் ப்ரஸா தம் எடுத்துக்கொள்ளச் சொல்லியும் கொஞ்சம் ப்ரஸா தம் வெண்கலத்திலேயே சந்நிதி கைங்கர்ய பாருக் கிருக்கட்டுமென்றும் நியமிக்க, நம்பி "தந் யோ ஸ்மி" என்று அப்படியேசெய்து சிலபோது திருவால வட்ட கைங்கர்யமானபின்பு ஸ்வாமி நியமனப்ரகாரம் மட மேற எழுந்தருளினர். மறுநாள் காலையில் திருக்காப்பு நீக்கி ஸ்வரூப சேவை சேவிக்கும்போது கொஞ்சம் ப்ரஸா தமும் குழம்பும்பாலுமே சேஷித்திருந்ததைக்கண்டு பக வத் வைபவமும் நம்பியினுடைய ப்ரபாவமுமறிந்த மஹா னுபாவர்கள் நம்பியினுடைய ப்ரபாவத்தையும் பேரருளா ளருடைய சர்வ நியந்த்ருத்வத்தையுங் கண்டு ஆனந்த பரவசரானார்கள். சிலமந்தமதிகள் பெருமாள் பேரைச் சொல்லி நம்பி பசியாற்றிக்கொண்டாரென்று நினைத்து ஊரிலே நம்பி விஷயமாக அபலாபவார்த்தைகளைச் சொல் லித்திரிந்தார்கள். அதை நம்பிகேட்டு உலகர் பழிதூற் றில் துதியாகுமென்று சந்துஷ்டராயிருந்தார். பேரரு ளாளர் சர்வஜ்ஞராகையாலே மந்தமதிகளாயிருக்கிறபேர் கள் நம்பி விஷயத்தில் அபசாரப்பட்டு அதோகதியை அடைய யத்தனிக்கிறார்கள். அதற்கு மூலம் நாமாகிறோ மாகையாலே அந்த நிந்தை நீங்கும்படியாயும் நம்பியை எல்லாரும் கொண்டாடும்படியாயும் தம்முடைய சர்வசக்

தித்வமும் அகடனகடனு சாமர்த்தியமும் ஆஸ்ரிதவாத் ஸல்யமும்வெளியாகும்படியாகவும் ஸங்கற்பித்து, வடக்கே மஹா தனிகனான ஒரு கோஸாயிக்கு ஸ்வப்நம் சாதிக்க அந்த கோஸாயி ப்ரயாணமாய் திருமலைக்கு வந்து திரு வேங்கடமுடையானை தண்டன் சமர்ப்பித்து பெருமாள் கோயிலுக்கு வர ப்ரயாணகதியிலே தேவப்பெருமாள் அந்த கோஸாயி ஸ்வப்னத்திலே யெழுந்தருளி உன்னு டைய சொந்த த்ரவ்யத்திலே மனப்பூர்த்தியாய் ஆயிரந் தளிகையும் அங்காரவடிசிலும் காலஸந்தியிலே அமுது செய்யும்படியாயும் உச்சிகாலத்தில் அலங்கார ப்ரசாதம் லக்ஷம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஆகும்படியாயும் செய்வித்து அதை நாம் அமுது செய்தவுடனே நீ கிட்டவிருந்து பார்த்து சந்தோஷிக்கவேண்டுமென்று ஸ்வப்நமாக அந்த கோஸாயியும் ஸ்வப்ந மிருந்தபடியை நினைத்து பஹு குதூஹலனாய் பொருளல்லாத வென்னைப் பொருளாக்கித் தாமே யெழுந்தருளி ஸ்வப்நம் சாதித்தாரே யென்று அப்போதே சில த்ரவ்யங்களைக்கொடுத்து தன் சொந்த மனுஷ்யர்களை யனுப்பி காஞ்சிபட்டணத்தில் வேண்டிய சாமக்ரியைகளைச் சேர்த்துவைக்க, கோவில் தர்மகர்த்தா வுக்கு பெருமாள் ஸ்வப்நம் சாதித்து அந்த கோஸாயி சொன்ன ப்ரகாரம் செய்விக்கும்படி நியமித்தருளினர்.

பின்பு கோஸாயி பெருமாள்கோயில்வந்து சேர்ந்து சகல சாமக்ரியையும் குறைவற சமர்ப்பித்து பட்டணத்தில் ஒருவரும் தளிகைபண்ணவேண்டாம் பெருமாள் அமுது செய்து ப்ரசாதம் சாதிக்கிறரென்று பறைசாற்றி உதைய மான உடனே ப்ரஸாத வகைகளை யெல்லாம் பெருமாள் ஸந்நிதி வையமாளிகையில் கொண்டுவந்து சேர்த்து அர்ச்சகர் அமுதுசெய்யப்பண்ணவந்து நிற்க, திருக்கச்சிநம் பிக்கருளப்பாடிட்டழைக்க அவரும் அஞ்சியிருக்க அர்ச்

சகரைக்கொண்டு நம்பியை உள்ளே அழைப்பித்து மற்
றொருவரும் உள்ளே வராமல் திட்டம்செய்து வையமாளி
கையிலிருந்த தளிகைகளையெல்லாம் அர்ச்சகர் கொண்
டுவந்து கொடுக்க நம்பி வாங்கி ஸ்வாமிக்கு சமர்ப்பிக்க
கோவர்த்தனத்துக்கு இட்ட பொங்கலை அங்கோர் பூத
வடிவுகொண்டு கண்ணன் அமுதுசெய்ததுபோல் தேவப்
பெருமாள் உலகமுண்ட பெருவாயாலே யெல்லாவற்றையு
மமுதுசெய்தருளி திருக்காப்பை நீக்கி கோஸாயிமுதலான
பேரை ஸேவிக்கப்பண்ணிவைத்து பின்பு அலங்காரத்தை
அர்ச்சகர்களைக்கொண்டு அமுதுசெய்யப் பண்ணுவித்து
ஊரிலெல்லாருக்கும் ப்ரசாதங் கொடுப்பித்து, எல்லா
ரும் சந்தோஷப்படும்படியாயும், இத்தனை தளிகைகளை
யும் தேவப்பெருமாள் ஒருவருமே கொஞ்சமாகிலும் சேஷி
யாமல் அமுதுசெய்தாரே யென்கிற ஆச்சரியமும், இந்த
கோஸாயினுடைய ஸொத்தும் நல்லது, இவர் மனஸும்
நல்லதென்று எல்லாரும் கொண்டாடும்படியாயும் செய்த
ருளின வளவிலே, முன்பொருநாள் க்ஷீராந்நமும் குழம்
புப்பாலும் பெருமாள் சேஷம்வையாமல் அமுதுசெய்
திருக்க புரஜனங்க ளதையறியாமல் திருக்கச்சி நம்பி
மேலே பழிசொன்னார்களே அது பெருமாளுக்குத் திரு
வுள்ளம் சகியாமல் தம்முடைய ஆஶ்ரிதவாத்ஸல்யத்தை
யும் நம்பியினுடைய ப்ரபாவத்தையும் கோஸாயினுடைய
ஹ்ருதய பரிசுத்தத்தையும் வெளிப்படுத்தத் திருவுள்ள
மாய் இப்படி செய்தாரென்று எல்லாரும் வசனித்துக்
கொண்டார்கள்.

## நம்பிகளைச் சனி பீடித்தது.

பின்பொருநாள் தேவப்பெருமாளும் நம்பியும் ஸல்லா
பியா நிற்கிற சமயத்திலே நம்பியைப்பார்த்துப்ராரப்தகர்ம

பலமாய் வருகிற வ்யஸநம் அநுபவித்தே யறவேண்டுங்கா ணுமென்று அருளிச்செய்ய நம்பியு மதைக்கேட்டு ஏதுக் காக இங்ஙன மருளிச்செய்ததென்று விண்ணப்பம்செய்ய பெருமாளும் உமக்கு ஏழுரையாண்டு சனிவருகிறதுகா ணும் அந்த வ்யசந மனுபவித்துத் தீரவேண்டுமென்ன நம்பியும் அடியேனநுபவிக்கமாட்டேனென்ன பெருமாளும் ஆகில் ஏழுரைமாசமாகிலும் அநுபவிக்க வேண்டுமென்ன நம்பியும் என்னால் முடியாதென்ன பெருமாள்ஏழுரைநாளா கிலும் அநுபவிக்கவேண்டுமென்ன நம்பியும் அதுவும் அசக்யமென்ன பெருமாளும் ஆகில் ஏழுரை நாழிகையாகி லும் அநுபவித்தே தீரவேண்டும் ஸாஸ்த்ரவையர்த்யம் வாராமைக்காக வென்றருளிச்செய்தார். அநந்தரம் ஒரு நாள் உதயத்திலே சந்நிதிப்பேர் திருக்காப்பு நீக்கி உள் ளே புக்கு ஸோதித்த விடத்திலே நவரத்ந கசிதமாய் பெருமாள் திருத்தோளிலே சாத்தியிருந்த திவ்யாங்க தத்தைக் காணுமல் பரபரப்போடே யெங்குந் தேடிப்பார் த்து அதிகாரிக்கறிவிக்க அவனு மங்குள்ள பேர்களை யெல்லாரையும் அழைத்து சீக்கிரமாக ஆபரணத்தைக் கொண்டுவாருங்களென்ன அவர்களுங்கூடி சங்கேதம் பண்ணிக்கொண்டு சந்நிதியிலே யெப்போதும் நம்பி யிருக் கிறபடியால் அவரே எடுத்திருக்கவேண்டுமென்ன அதிகா ரியும் நம்பியை நிர்ப்பந்தித்து அதைக் கொண்டுவாரு மென்ன இவருமடியே னறியேனென்ன அதிகாரியும் ரோஷாவிஷ்டனாய் கடுமையோடு நிர்ப்பந்திக்க நம்பி துஸ்ஸஹமான துக்கத்தையும் லஜ்ஜையையும் அடைந் திருந்தார். அவ்வளவிலே பெருமாளும் ஆஸ்ரிதவாத் சல்ய ராகையாலே தந் திருத்தோளிலே அந்த திவ்யாங்க தத்தை ப்ரகாஸிப்பித்தருளினர். அர்ச்சகர்களும் அதைக் கண்டு திகைத்து அதிகாரிக்கு இச்செய்தியைச்சொல்ல

அவனும் விஸ்மிதனாய் நம்பியை தண்டன் ஸமர்ப்பித்து அபராதக்ஷாபணம் பண்ணிக்கொண்டு நீர் ஸந்நிதிக்கெழுந்தருளுமென்று போகவிட்டான். நம்பியும் திருவநந்தஸரஸிலே நீராடி அடியேனுக்கு பஹூகாலாநுபவமாக வேண்டியிருந்த பாபராசிகளைச் சேர்த்துக் கோடியைக் காணியாக்கிக், ''லகுதண்ட ப்ரபந்நஸ்ய ராஜபுத்ராபராதவத்'' என்கிறபடியே கதைகாட்டிப்போக்குவதே, இதென்ன நீர்மையிருந்தபடிதானென்று பெருமாளுடைய அபாரகாருண்யத்தைக் கொண்டாடா நின்றுகொண்டு ஸந்நிதியிலேகிட்டி பேரருளாளர் திருவடிகளிலே தானுந் தடக்கையுங்கூப்பி தண்டன் ஸமர்ப்பித்து எழுந்திராமலிருக்கப்பெருமாளும் மிகவும் க்லேசப்பட்டீரோ என்று வினவியருளி, பின்பு ப்ரக்ருதி கர்மம் இருந்தபடி கண்டீரோ யென்று அருளிச்செய்ய நம்பியும் 'உன்மாயங்கள் மேலைவானவரு மறியாரினியென்பரமே' 'என்று விண்ணப்பஞ்செய்து தமக்கு நியதமான கைங்கர்யத்திலே தத்பரராயிருந்தார்.

## தேப்பெருமாளிடத்தில் விசேஷார்த்தங்கள் அறிந்தது.

பின்பொருநாள் ராத்திரியிலே நம்பி''பாலாழி நீகிடக்கும்பண்பை''என்றுஆழ்வார்கள் ஈடுபடும்படியானதேவரீர் திருபாற்கடலிலே திருகண்வளர்ந்தருளுகிறபடியை அடியேனுக்கருளிச்செய்ய வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் அஃதிருக்கும்படிகேளீர். நாமங்கேயோகநித்ரையாகிற ஜகத்ரக்ஷண சிந்தையைப்பண்ணுவோங்காணும். அதாகிறது வ்யூஹசதுஷ்டயத்தில் அநிருத்த ஸம்ஜ்ஞையாலே தேஜஸ்ஸுக்கள் தரித்துக்கொண்டு ஸகல சேதனர்களுடைய உஜ்ஜீவநமும் எவ்வழியாலே செய்ததாமென்றுத்யானித்திருக்கை. இதுவே ஆபந்நருடைய குரல் கேட்டு அவர்களுடைய அபிமதங்களை தலைகட்டுவதாய்

அநந்தாவதாரங்கள் என்றருளிச்செய்ய, இதைக்கேட்டு நம்பியும் ஹ்ருஷ்டராய் இன்னும் சில விசேஷார்த்தங்களை அருளிச்செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் கருடத்யாநத்தாலே விஷந்தீருமாபோல ஆசார்யத்யானத்தாலே ஸம்ஸாரமாகிறவிஷந்தீரும்; "கானத்தின் கடன்மல்லைத்தல சயனத்துறைகின்ற, ஞானத்தினொளியுருவை நினைவாரென்னுயகரே" என்றும் "கடன்மல்லைத்தலைசயனத்துறைவாரைக் கொண்டாடும் நெஞ்சுடையாரவரெங்கள்குலதெய்வமே" என்றும் கலிகன்றி யருளிச்செய்கையாலே பகவத்சேஷத்வத்திலும் பாகவதசேஷத்வமே ஆத்மாவுக்கு நிலைநின்ற ஸம்பத்து என்றும், பகவதபசாரம், பாகவதாபசாரம், அஸஹ்யாபசாரம் என்னும் மூன்றனுள், பகவதபசாரமாவது ஸ்வயத்நஸாத்ய னெம்பெருமானென்றிருக்கை; பாகவதாபசாரமாவது, ஸ்ரீவைஷ்ணவர்களோடு தன்னையும் ஸமானப்ரதிபத்திபண்ணுகை; அஸஹ்யாபசாரமாவது அர்ச்சாவதாரத்தினுடைய த்ரவ்ய நிரூபணம்பண்ணுதல், ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஜாதிநிரூபணம்பண்ணுதல் என்றும், மருகாந்தாரத்தில் தண்ணீர்ப்பந்தலோபாதி ஸம்சாரத்தில் ஸ்ரீவைஷ்ணவ ஸஹவாஸமென்றும், அம்ருதபாநத்தாலே ஜராமரணநாசமுண்டாமாபோலே ஸ்ரீவைஷ்ணவ க்ருஹத்திலே அம்புபாநத்தாலே ஸகலபாபங்களும் நசிக்குமென்றும், அருளிச்செய்து, இப்படி பிரசங்காத் ப்ரசங்கத்தாலே சென்றபோது தெரியாதே நல்லசிபசியாக பெருமாளும் நம்பியைப்பார்த்து மிகவும் போதாயிற்று காணும், மடமேறப் போய்வாருமென்ன நம்பியும் வெளியிலேவந்து காடாந்தகாரமாயிருக்கக்கண்டு, தம்மநுசரனை அருளாளா பந்தங்கொண்டு வாவென்ன அவனொரு மூலையிலே புக்கு நித்ராக்ராந்தனாக பெருமாள் தாமே தம்முடைய திருவாழியை தீபமாகக்

கொண்டு அவனைப்போலே கூட வந்து மடத்திலே புகுமள விலே காணமற்போக, நம்பியும் விஸ்மயபரவமாராய் "சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி விண்ணோர்கள் நன் னீராட்டியந்தூபந்தராநிற்க" என்று நித்யஸூரி நிவ ஹங்கள் திருவோலக்கங்களாக விருந்து பணிசெய்ய அவர் கள் கையில் கைங்கர்யங்களைக்கொண்டு ஆநந்திக்கும் இந்தப் பரமபுருஷன் அர்ச்சாவதாரமாய் ஹஸ்திகிரியில் எழுந்தருளி அந்த அர்ச்சாஸமாதியையு மதிக்ரமித்து, பொருளல்லாத வென்னைப் பொருளாக்கித் திருப்பவளந் திறந்து வார்த்தை யருளிச்செய்வது மல்லாமல் அநுசரக் ருத்யமும் செய்யும்படி திருவுள்ளமானால் அடியேன் எங்ங னமிவர் திருவடிகளிலே அபசாரப்பட்டுக்கொண்டிருக்கி றது ஆகையால் இந்த த்யாகமண்டபத்தைவிட்டு புஷ்ப மண்டபத்துக்கு போகக்கடவேன் என்று அப்போதே புறப்பட்டு கடிகாசலத்தேறப்போய் அக்காரக்கனியையும் ஸேவித்து தக்கானையும் திருவடிதொழுது ராக்ஷஸ குல காலனை உத்யோகித்துத் திருவாழி திருச்சங்குடன் சதுர் புஜமும் யோகபட்டையும் சாத்திக்கொண்டு வீற்றிருந்த திருக்கோலமாக எழுந்தருளியிருக்கிற சிறிய திருவடியை யும் ஸேவித்து பயணகதியிலே சென்று "வணங்குமினோ சேனையர் வேங்கடத்தை" என்று ஆழ்வார் பாசுரத்தை அநுஸந்தித்துக்கொண்டெழுந்தருளும்போது "காண்ப தெஞ்ஞான்று கொலோவினையேன் கனிவாய்மடவீர், பாண்குரல் வண்டினோடும் பசுந்தென்றலுமாகி யெங்கும், சேண்சினை 'யோங்குமரச் செழுங்கானத்து வல்லவாழ், மாண்குறட் கோலப்பிரான் மலர்த்தாமரைப் பாதங்களே' இத்யாதிகளின்படியே காணவேண்டுமென்கிறபெரியவாசை யோடே போகிற விவர் நடுவழியிலே ஒரு ஓடையிலே ஒரு வன் செங்கழுநீர்க்கிழங்குகளைப்புதைக்கக்கண்டு ஆருக்கா

கவென்ன அவனும் சிந்துபூமகிழுந் திருவேங்கடத்தானுக் கென்ன நம்பியு மவனையிப்போ புஷ்பிக்குமோவென்ன அவனும் இப்போது கிழங்கைப்புதைக்கவாவது இப்போதேயது புஷ்பிக்கவாவது போம்போம் பெரிய தாதரேயென்று பரிஹஸிக்க நம்பியு மதைக்கேட்டு அஃதப்படியே யாங்காணும்"கள்ளார்துழாயுங்கணவலரும்" என்றன்றோ ஞானவான்கள் பாசுரமிருக்கும்படி ஆகையால் இப்போது நட்டகிழங்கும் இப்போதே தழைத்துப் புஷ்பிக்க வேண்டுங்காணென்றுஅருளிச்செய்ய தத்க்ஷணத்திலே தழைத்துப் பூத்து நின்றது. அதை நம்பி பார்த்து இதுகளை யிப்போதேகொண்டுபோய் ஸ்ரீநிவாஸன் திருவடிகளிலே ஸமர்ப்பிக்க வேண்டுமென்கிற அபிநிவேஸங்கனத்து அந்தப் புஷ்பங்களை யெல்லாம் ஒருகுடலையிலே எடுத்துக்கொண்டு அதித்வரையோடே போகாநிற்க அவ்விடத்திலே அதிமநோஹர ரூபலாவண்ய ஸாலியா யிருப்பாரொருமஹாபுருஷன் வந்து இங்கே தந்திட லாகாதோ வென்ன நம்பியு மப்படியே யென்று கொடுக்க அவரு மந்தப் புஷ்பத்தை யெல்லாம் தோளிணை மேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்து மறைந்து போனார். நம்பியும் அவர் திருமேனி அழகையும் அந்தத் திருமேனிக்குப் பரபாகமாக இந்த புஷ்பங்களைச் சாத்திக்கொண்ட அழகையும் ஸேவித்து விஸ்மிதராய் அவரிலு மிவர் அதிஸரஸியாயிராநின்றா ரென்று கொண்டு அறக்கடுகி தெழிகுரலருவித் திருவேங்கடத்தெழில்கொள்சோதியை யெப்போது காண் போமென்கிற பேராசையோடே கடுநடையிட்டுத் திருப்பதியேற வெழுந்தருளி ஆழ்வார் தீர்த்தத்திலே நீராடி அவ்விடத்திலிருக்கிற பெரியோர்களையும் ஆழ்வார்களையும் நாச்சிமார்களையும் பெருமாளையும் ஸேவித்து மறுநாள் விடிவோரையில் திருமலை அடி

வாரத்திலே அழகிய சிங்கரைத் திருவடிதொழுது ப்ர பத்தி பண்ணிக்கொண்டு மெள்ள வேறி அங்குள்ள பக்ஷி ஸங்கங்களையும் வ்ருக்ஷ ஷண்டங்களையுங்கண்டு களித்துக் கொண்டு வண்டுகள் முரலுகிற பாட்டுகளையும் ஆலித்துக் கூவாநின்ற குயிலினங்களின் குரலோசையையுங் கேட்டுக் கொண்டு 'சேரூர்சுனைத்தாமரைச் செந்தீமலருந் திருமலை யையும், திணரார்மேகமெனக் களிறுசேருந்திருவேங் கடத்தையும், செடியார் வினைகள் தீர்மருந்தாய திருவேங் கடத்தையும், தேனேய் பூம்பொழில்சூழ் திருவேங்கட மாமலையையும், குன்றேய் மேக மதிர்குளிர் மாமலை வேங் கடத்தையும், நிலத்தோய் நீள்முகில்சேர் நெறியார் திரு வேங்கடத்தையும், விண்ணார் நீள்சிகரம் விரையார் திரு வேங்கடத்தையும், கரிசேர் பூம்பொழில்சூழ் கனமாமலை வேங்கடத்தையும், கோற்றேன் பாய்ந்தொழுகுங் குளிர் சோலைசூழ் வேங்கடத்தையும், கற்றேன் பாய்ந்தொழுகுங் கமலச்சுனை வேங்கடத்தையும், விலங்கற் குடுமித் திரு வேங்கடத்தையும், விண்டோய்சிகரத் திருவேங்கடத்தை யும், சேணார் திருவேங்கடத்தையும், வில்லார் மலிவேங் கட மாமலையையும், கானவரிடுகா ரகிற்புகை யோங்கு வேங்கடத்தையும், குறவர்மாதர்களோடு வண்டுகுறிஞ்சி மருளிசைபாடும் வேங்கடத்தையும், எங்கும் வானவர் தா னவர் நிறைந்தேத்தும் வேங்கடத்தையும், கவரிமாக்கணஞ் சேரும்வேங்கடத்தையும், வேய்கள் நின்று வெண்முத்தமே சொரி வேங்கடத்தையும், ஆடுதாமரையோனு மீசனு மமரர்கோனு நின்றேத்தும் வேங்கடத்தையும், மின்னுமா முகில் மேவுதண்டிருவேங்கடத்தையும் கண்டுகளித்து அவ் விடத்திலே மலைகுனிய நின்றான் திருவாழி பரப்பினான் பங் கயச் செல்வி திருமலைநம்பி திருமழிசைப்பிரான் குலசே கரன் திருவேங்கடத்து நின்றான்வண்சடகோபன் யமுனைத்

துறைவன் அழகிய மணவாளன் பேரருளாளன் திருமங்கைமன்னன் தொண்டரடிப் பொடி ஹரிசரணாலயன் புண்டரீகன் திருப்பேர்நகரான் துடக்கமான அநேகத் திருநந்தனவனங்களையும் ஸேவித்து விஸ்மிதராய் திருமலையைக் கிட்டி யாளியுங்கோளரியும் பொன்மணியும் முத்தமும் பூமரமும் பன்மணி நீரொடு பொருதுருளும் கானமும் வானரமும்வேடுமுடைவேங்கடமென்கிற நன்மணிவண்ணனூரிலே சென்று அவனுடைய ஸௌசீல்யத்திலே ஆழங்காற்பட்டு ஸ்வாமி புஷ்கரணியிலே நீராடி த்வாதசோர்த்வபுண்ட்ரங்களையும் ஸ்ரீசூர்ணத்தையும் தரித்து ஸந்துஷ்டஹ்ருதயராய் வையமூன்று மேனத்துருவாயிடந்த ஞானப்பிரானையும் ஸேவித்து உள்ளே புகுந்து திருவேங்கட முடையானுடைய திவ்யாவயவங்களுக்கும் திருப்பீதாம்பரத்துக்கும் திருவாபரணங்களுக்குமுண்டான சேர்த்தியழகை "முடிச்சோதியாயுனது முகச்சோதி மலர்ந்ததுவோ, அடிச்சோதிநீநின்ற தாமரையா யலர்ந்ததுவோ,, படிச்சோதியாடையொடும் பல்கலனாய்நின்பைம்பொற், கடிச்சோதி கலந்ததுவோ திருமாலே கட்டுரையே" என்கிறபடியே யநுபவித்துக்கொண்டு நிற்க அவருடைய திவ்யாவயவ ஸௌந்தர்ய ஸாகரதரங்க பரம்பரைகளிலே ஆக்ருஷ்டரான இவருக்குத் தீர்த்தப்ரஸாதத்தையும் ஸ்ரீஶடகோபனையும் ப்ரஸாதித்து உமக்கிஷ்டமானபடியே நம்பரிஸரத்திலே வர்த்திக்கவமையுமென்று அர்ச்சகமுகேந வருளிச்செய்ய நம்பியும் "அம்மாவடியேன் வேண்டுவதீதே" என்று இசைந்திருந்தார். இப்படி பகவந்நியமனத்தாலும் ஸ்வாபிலாஷையாலும் திருமலையில் வர்த்திக்கும்போது அதிமநோஹரங்களாயுமுள்ள திருவருவி பாய்ச்சல்களாலே ஆஶ்ரித விஷயத்தில் நிராபாதகமாய் ப்ரவஹியாநின்றுள்ள திருவேங்கடத்தானுடைய ஸாரங்களை வ்ருஜியாநின்றுள்ள

திருத்தாழ்வரைகளையுடைத்தாய் "பெருகுமதவேழம்மாப்
பிடிக்குமுன்னின்று, இருகணிள மூங்கில்வாங்கி அருகிருந்த,
தேன்கலந்து நீட்டுந் திருவேங்கடங்கண்டீர், வான்கலந்த
வண்ணன்வரை" என்று முக்தப்ராயருங் கொண்டாடும்
படியான திருமலையினுடைய ஸௌபாக்யத்தையும்
"சங்கினோடும் நேமியோடுந் தாமரைக்கண்களோடுஞ்செங்
கனிவாயொன்றினோடும் செல்கின்றதென்னெஞ்சம்" என்று
திருக்குறுங்குடிநின்ற நம்பியுடைய திவ்யஸௌந்தர்யத்
தைத் திருக்குருகூரில் திருப்புளியாழ்வாரிலே எழுந்தரு
ளியிருந்த நம்மாழ்வாருக்குத் திருக்குறுங்குடிநம்பி சென்
று ப்ரத்யக்ஷஸாக்ஷாத்காரமாக ஸேவை ஸாதிக்க ஆழ்
வாருங் கண்டு அநுபவித்ததுபோல் திருக்கச்சி நம்பியும்
வேங்கடத்துத் தன்னைத் திருமங்கை தங்கியசீர் மாய
னை திருவேங்கடமுடையான் திவ்யாயுதங்களையும் திவ்
யாபரணங்களையும் திவ்யாவயவங்களையுங்கண்டு பஹுப்
ரகாரமாக வனுபவித்துக்கொண்டு போராநிற்கிறவிவர் த்ர
ஷ்டவ்யஶ்ரோதவ்யஜ்ஞாதவ்யங்களை மறந்து கதங்களான
வஹோராத்ரங்களையு மறியாதே இருந்து அவ்விடத்தில்
யாகோத்பவரான தேப்பெருமாளுக்குத் திருவாலவட்டம்
வீசுகிறதுபோல இவ்விடத்தில் திருவேங்கடமுடையானு
க்கும் திருவாலவட்டம் ஸேவிக்க, திருவேங்கடமுடையா
னும் குளிரருவி வேங்கடத்தின் கோவிந்தனன்றோ,
அஹோராத்ரமும் மிளகோரையும் மிளகு கஷாயமும்
அமுதுசெய்து சீதள உபசாந்தமாக பச்சைகற்பூரத்தை
யெப்போதும் விடாமல் சாத்திக்கொண்டிருக்கிற நமக்கு
சீதோபசாரம் எதுக்கு? உத்தர வேதியிலே ஹோமகுண்
டத்தில் அவதரித்தோமே அவ்விடத்தில் இஷ்டமாயிரு
க்கு மாகையால் அவ்விடத்துக்குப்போய் திருவாலவட்டஞ்
சுழற்றிப் பணிமாறு மென்று நியமித்தருள, நம்பியும்

ஹ்ருஷ்டராய் ''ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி'' என்று தொடங்கி ஆழ்வார்கள் பாசுரங்களை விண்ணப்பம் செய்து நிற்க, திருவேங்கடமுடையானும் நம்பிக்குத் தீர்த்தம் ஸ்ரீசடகோபன் முதலானவரிசைகளையும் ப்ரஸாதிக்க நம்பியும் அவ்விடத்தினின்றுபுறப்படுகிறஸமயத்திலேபேருளாளரும்நம்பியைப்பிரிந்திருக்கமாட்டாதே அவரையழைத்துக்கொண்டு வரவேண்டுமென்கிறதிருவுள்ளத்தையுடையராய் திருமலையேற வெழுந்தருளி நம்பி முன்னே நிற்க, நம்பியுங்கண்டு துணுக்கிட்டெழுந்திருந்து ப்ரதக்ஷிண ப்ரணாமாதிகளைப் பண்ணி ஸவிநயராய் நிற்கப் பேரருளாளரும் முன்பு நாம் ஜாநகியைப்பிரிந்து பட்டதெல்லாமிப்போ தும்மைப் பிரிந்து பட்டோங்காணும். இறையுமகலகில்லேன் காணும் என்ன, நம்பியும் திருவேங்கடமுடையானுடைய திருமுகமண்டலத்தை ஸேவிக்க அவரும் விடையளித்தருள, ஹ்ருஷ்டராய் பர்த்ருக்ருஹத்தினின்று மாத்ருக்ருஹத்துக்குவரும் பாலவதூப்போலே பேரருளாளர் பின்சென்றார். பின்பு திருக்கச்சியிலே சேர்ந்து பேரருளாளரை நோக்கி தேவரீருடைய திருவடிகளில் அநுகூலவ்ருத்திகளைப் பண்ணவேண்டுமென்றன்றோ அடியிலே நாசரணதிகளை ப்ரஸாதித்தருளியது. ஆகையால் தேவரீரே கைங்கர்யத்தை நியமித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் இன்றுமக்குச் சொல்லவேண்டுவதென்ன, அடிதுடங்கிப்பண்ணின கைங்கர்யத்தையே நடத்திக்கொண்டு வாருமென்ன, இவருமதை யிடைவிடாமல் செய்துகொண்டு போராநிற்க, ஒரு வர்ஷாகாலத்தில் க்ருஷ்ணபக்ஷராத்ரியிலேபெருமாள் திருமுன்பே நின்று திருவாலவட்டம் ஸேவித்துக்கொண்டு நிற்கிற நம்பி தாபத்ரயாபி பூதனாய் ஸம்ஸாரத்திலே நிர்விண்ணனாய் முமுக்ஷுதசை ஜநித்திருக்கும் சேதனனுக்கு

ஜ்ஞாதவ்யங்களான அர்த்தவிசேஷங்களை அடியேனுக்கு ப்ரஸாதித்தருளவேண்டுமென்று ப்ரார்த்திக்க, பேரருளாளரும் அர்த்தபஞ்சகங்களையும் அருளிச்செய்து, நம்பியைப் பார்த்து மத்ய ராத்ரியாயிற்று மடமேறப் போய்வாருமென்று நியமித்தருள, நம்பியும் வெளியிலே வந்து பார்த்து மழை பொழிகையாலே தம்மநுசரனை பேரருளாளனைக் குடை கொண்டுவாவென்ன, அப்போது அவன் ஓருழலையிலே நித்ராபரவசனாயிருக்க, பெருமாள் தாமேசென்று நங்குடையாமென்கிற திருவனந்தாழ்வானையே குடையாக வெடுத்துக்கொண்டு வாரீரென்று மடமளவும் சென்று மறைந்து போக நம்பியும் விஸ்மிதரானார்.

## யாதவபிரகாசனை வைஷ்ணவனாக்கினது.

பின் பொருநாள் பெருமாள் உச்சிகாலத்தில் அமுது செய்து விஶ்ரமித்தருளுகிறவளவிலே நம்பியும் மடமேற வெழுந்தருளுவதாகப் புறப்பட்டுத் திருவீதியிலே சென்ற விடத்தில் ஸூர்யனும் ஔஷ்ண்யத்தையுடைய கிரணங்களாலே பூமியை தபிப்பிக்கையாலே தரையிலே நடக்க மாட்டாதே பாதுகைகளை இடுக்கிக்கொள்ள அவையும் அத்யுஷ்ணமாய் துஸ்ஸஹமானபடியினாலே நம்பியும்தளர பெருமாளும் அந்தவெதுப்பை யடக்க நம்பியும்மடத்திலே யெழுந்தருளி தம்முடைய பாதுகையைப் பார்க்க அந்தப் பாதுகை கூர்மரூபமாகத்தோற்ற, ஸ்வதந்த்ரனுடைய வ்யாபார மிருந்தபடியைக்கண்டு இதென்ன நீர்மைதானென்று நினைத்து விஸ்மிதரானார். பின்பொருநாள் ராத்ரியாதவ ப்ரகாசனுடைய தாயார் ஸ்வப்நத்திலே தேவப்பெருமாள் எழுந்தருளி வாராய் ப்ருதையே உன்னுடைய புத்ரனை யாதவப்ரகாசனை நம் மிராமாநுஜன் திருவடிகளை யாஶ்ரயித்து வைஷ்ணவமாக

தண்டத்ரயத்தையும் பரிகாயஜ்ஞோபவீதங்களையும் தரித்து வைஷ்ணவ ஸந்யாஸியாய் வாழச்சொல்லென்று நியமித்தருள, மற்றொருநாள் இச்செய்தியை யாதவப்ரகாசனுக்கு அவன் தாயாரறிவிக்க அவனும் சாஸ்த்ரஜ்ஞனாகையாலே இது ப்ராமாணிகமாயிருந்தது பகவத்நியமனமுமுண்டாயிருந்தது. ஆகையால் இப்படி செய்யலாமென்று நிச்சயித்து, 'பூர்வம் நாம் பரிகாயஜ்ஞோபவீதங்களை த்யஜித்தன்றோ ஏகதண்டியானோம் அதுக்கு ப்ராயச்சித்தம் பூப்ரதக்ஷிணம்பண்ணும்படி சாஸ்த்ரமிருக்கிறதே, நமக்கு வார்த்திக்யமாகையால் அது பக்யமாகாதே, இனியென்னசெய்வோம்' என்று தாயாருடனே சொல்ல, அவளும் நம்பி ஸந்நிதியில் விண்ணப்பம் செய்ய, நம்பியும் அன்று இராத்திரி திருவாலவட்டம் பணிமாறும்போது பேரருளாளர் நம்பீ! நாம் யாதவப்ரகாசனை வைஷ்ணவ ஸந்யாஸியாகும்படி அவன் தாயாருக்கு ஸ்வப்நம் ஸாதித்தோம் அவனு மதுகேட்டு பூப்ரதக்ஷிணம்பண்ணத் தனக்கு சக்தியில்லையென்று அநுதாபப்படுகிறான். நம்மிராமாநுஜனை ஒரு ப்ரதக்ஷிணம்பண்ணினால் பூப்ரதக்ஷிணம் பண்ணினதற்கும் அதிகமாகையால் நம்மிராமாநுஜனை ஒரு ப்ரதக்ஷிணம்செய்து அவர் திருவடிகளிலே ஆஸ்ரயித்து ஸந்யஸிக்கச் சொல்லுமென்று நியமித்தருள, நம்பியும் எம்பெருமானார் வைபவத்தைப் பெருமாள் திருப்பவளத்தாலே வெளியிடுகைக்காக அதெப்படியென்ன பூமண்டலத்தை தரித்துக்கொண்டிருக்கும் அனந்தனுடைய அம்சாவதாரமாகையாலே காணுமிப்படி நாம் சொன்னோமென்று பேரருளாளரருளிச்செய்தார். இச்செய்தியை நம்பியும் யாதவப்ரகாசனுடைய தாயாருக்கருளிச்செய்ய அவளும் யாதவப்ரகாசனுக் கறிவிக்க யாதவப்ரகாசனும் ஒக்குமென்றிசைந்து உடையவரை ப்ரதக்ஷிணமாக வந்து

திருவடிகளிலே தண்டன்சமர்ப்பிக்க உடையவரும் க்ருபை செய்து ப்ராயசித்தவிதி பூர்வமாக பஞ்ச ஸம்ஸ்காரம் முதலாக த்ரிதண்ட ஸந்யாஸமும் செய்வித்து கோவிந்தஜீயரென்று தாஸ்யநாமமும் ஸாதித்து க்ருபைசெய்தருளினர்.

## பூவிருந்தவல்லியில் மூன்று பெருமாள்களின் அர்ச்சைகளை ப்ரதிஷ்டை செய்தது.

பின்பொருநாள் ராத்ரி நம்பி திருவாலவட்டம் ஸமர்ப்பிக்கும்போது பேரருளாளர் நம்பியை நோக்கி "நம்பீ! உம்முடைய ஜன்ம பூமியான பூவிருந்தவல்லிக்கு நீர் முன்னதாகப்போய் ஒருநாள் அவ்விடத்திலிரும் நாம் வருகிறோம்" என்ன, தத்யோஸ்மி என்று நம்பி விடைகொண்டு பூவிருந்தவல்லிக்கெழுந்தருள அவ்வூரார் திரண்டு எதிர்கொண்டுவந்து நம்பியை தண்டன் ஸமர்ப்பித்து ஆஹ்வானம் செய்து எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போனார்கள். அன்று ராத்ரி கோயில் திருமலை பெருமாள் கோயில் ஆகிய மூன்று திவ்யதேசத்தெம்பெருமான்களும் எழுந்தருளி நம்பிக்கு ப்ரத்யக்ஷமாய் ஸேவைஸாதித்து, அவ்வூராருக்கெல்லாம் ஸ்வப்நத்திலே ஸேவைஸாதித்து நம்பிக்காக நாங்களிங்கே வாஸஞ்செய்யத் திருவுள்ளமாயிருப்பதால் நீங்கள் எங்கள் மூன்று திருநாமங்களையும் அர்ச்சாரூபமாக எழுந்தருளப்பண்ணி திருப்ரதிஷ்டை செய்து நம்பியையும் அர்ச்சாரூபியாக ப்ரதிஷ்டியுங்களென்று நியமித்து, நம்பியை உத்தரவேதிக்கு அதித்வரையில் வரும்படி நியமித்து எழுந்தருளினர்கள். ஊராரெல்லாரும் உதயத்திலெழுந்திருந்து நம்பியிடத்தில் ஸ்வப்ந வ்ருத்தாந்தத்தை விண்ணப்பம்செய்ய நம்பியும்ஸ்வாமி திருவுள்ள ப்ரகாரமே யாகக்கடவதென்ன அவர்களும் அடியோங்களுக்கு நியமித்த கைங்கர்யம் நிர்விக்னமாக

நடந்து தலைக்கட்டும்படி தேவரீர் க்ருபைசெய்யவேண்டு மென்று ப்ரார்த்திக்க, நம்பியும் அகடனகடனாஸாமர்த்ய முள்ள எம்பெருமான்கள் நியமித்த கைங்கர்யம் குறைவற நிறைவேறும் என்று அநுக்ரஹித்து தாமும் த்யாக மண்டபத்துக்கு எழுந்தருளினார். அவர்களும் ஸந்நிதிகட்டி கோயில் திருமலை பெருமாள்கோயில் எம்பெருமான்களை யும் நம்பியையும் திருப்ரதிஷ்டைபண்ணி திவ்யோத்ஸவம் கண்டருளப் பண்ணினார்கள்.

நம்பியும் சென்று ஒருராத்ரி ஜ்ஞாநாதிகரு மீடுபடும்படி யான திவ்ய ஸௌந்தர்யத்தையுடைய பேரருளாளர் திரு முகமண்டலத்தை இமைகொட்டாது ஸேவித்துக்கொண் டிருக்கும்போது ப்ரக்ருதி ஸம்பந்தத்தாலே நம்பிகள் சற்றே கண்ணுறங்க, திருக்கையில் திருவாலவட்டம் நெகிழ, நம்பியும் நொந்துக்கொண்டு பகவத் கைங்கர்யத்துக்கு ப்ரதிபந்தகமான இந்த ப்ரக்ருதிபந்தத்தைக் கழித்தருள வேண்டுமென்று பெருமாள் ஸந்நிதியில் விண்ணப்பஞ் செய்ய, பெருமாளும் நம்பி நீர் விர்ப்பரராயிருமென்றருளிச் செய்ய, "பச்சைமாமலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண், அச்சுதா வமரரேறே யாயர்தங் கொழுந்தே யென்னும், இச்சுவைதவிர யான்போ யிந்திர லோகமா ளும், அச்சுவைபெறினும் வேண்டே னரங்கமா நகருளா னே" என்று பெருமாள் திருமேனியி லீடுபட்ட தொண்ட ரடிப்பொடியாழ்வார் நிலையாக திருக்கச்சி நம்பியுடை தேப் பெருமாளுடைய திருமேனியழகிலீடுபட்டுக்கொண்டு எழுந் தருளியிருந்தார்.

## நம்பிகள் திருநாட்டுக் கெழுந்தருளியது.

பின்பொருநாள் நம்பியுடைய ஆத்மகுண பூர்த்தியை யும் அவருடைய திருமேனித்தளர்ச்சியையுங்கடாக்ஷித்து

பேரருளாளர் நம்பீ! உம்முடைய பாஞ்சபூதிகதேஹம் மிக
வும் தளர்ந்திருப்பதாலும் நாமும்மைப்பிரிந்து தரிக்கமாட்
டாமையாலும் இன்னுஞ்சில ஆயுஸ்ஸு உமக்குத்தருகிறோம்
விபீஷணாழ்வானுக்குக் கொடுத்ததுபோல. அப்போது
உமக்கு தேஹத்தில் த்ருடம் வரும் என்று அருளிச்செய்ய,
நம்பியும் நடுநடுங்கி 'வெள்ளத் திடைப்பட்ட நரியினினம்
போலே யுள்ளந் துளங்காநிற்ப னாழிவலவா, இடைய
னெறிந்த மரமேயொத்திராதே யடையவருளா யெனக்
குன்னருளே' என்கிறபடியே பரமபக்திதலையெடுத்து வரத
ராஜாஷ்டகமென்கிறஸ்தோத்ரத்தை விண்ணப்பஞ்செய்து
பேரருளாளர் திருவடிகளிலே தீர்க்க ஶரணாகதிபண்ணி
யெழுந்திராமலிருக்க பெருமாளும் நம்பீ! நீரஞ்சவேண்டாம்
உம்முடைய மனோரதப்படியே ஆகிறது எழுந்திரும் என்று
முடிபிடித்தெடுத்து தீர்த்த ப்ரஸாதம் ஸ்ரீஶடகோபன்
முதலான வரிசைகளையும் ப்ரஸாதித்து நீர் மடமேறப்
போயிருமென்று விடைகொடுத்தருள நம்பியும் ப்ரக்ருதி
ஸம்பந்த மறுந்து தேகவிஶேஷப்ராப்தியணித்தானவாறே
சிறைக்கூடத்திலிருந்த ராஜகுமாரன் முடிசூட வருமாறு
போலே பெரிய ப்ரீதியோடே மடத்திலே எழுந்தருளி
க்ருதக்ருத்யராகையாலே தேஹவியோகத்தை யாசைப்
பட்டுக்கொண்டு பெருமாளுடைய ஸௌஶீல்யத்தை அநு
பவியாநிற்க அத்திவ்யநகரத்திலுள்ள விலக்ஷணர்களெல்
லாரும் அச்செய்தியைக்கேட்டு இவருடைய அந்திமத
ஶையை ஸேவிக்கவேண்டுமென்கிற அபிலாஷையினாலே
திரளாகவந்தார்கள். நம்பியும் இவர்களை யதோசிதமாக
ஸம்பாவனைபண்ணி தேவரீர்கள் பொருளல்லாதவென்னைப்
பொருளாக்கி இத்தசையிலே யிவ்வளவாக வெழுந்தருளு
வதே யென்று விண்ணப்பஞ்செய்தார். அவர்களுந்
தேவரீ ரிப்படி யருளிச் செய்யலாமோ பெருமாளு

முட்பட தேவரீரிடத்திலே குடிபுகுந்திருக்கிற திருவுள்ளத்தை யுடையராயிருக்க இஃதாஶ்சர்யமே வென்று விண்ணப்பஞ்செய்தார்கள். நம்பியும் அவர்களைக்குறித்து இப்படி பெருமாள் அடியேனிடத்தில் க்ருபைபண்ணுகைக்கு நிதாநம் ஸ்ரீ யாளவந்தாருடைய கடாக்ஷ விசேஷங்காணுமென்று அருளிச்செய்து ஸ்ரீ யாளவந்தார் திருவடிகளை த்யாநியா நின்றுக்கொண்டு நிமீலிதாக்ஷரானார்.

திருக்கச்சிநம்பிப்ரபாவம்

முற்றிற்று.

---

மருவாருந்திருவல்லி வாழவந்தோன் வாழியே
மாசிம்ருக சீரிடத்தில் வந்துதித்தோன் வாழியே
அருளாளருடன்மொழிசெய் யதிசயத்தோன்வாழியே
ஆறுமொழி பூதூரர்க் களித்தபிரான் வாழியே
திருவால வட்டஞ்செய்து சேவிப்போன்வாழியே
தேவராஜ சாட்டகத்தைச் செப்புமவன்வாழியே
தெருளாரு மாளவந்தார் தாளிணையோன் வாழியே
திருக்கச்சி நம்பியிரு திருவடிகள் வாழியே.

மாசிமான் றலையிற்பொன்னேன்வாரத்தில்வெள்ளைப்பத்தில்
ஏசிலா ஸௌம்யவாண்டில் இருந்தபூ வல்லிதன்னில்
பாசமில் விடையிற்சேநா பதியாழ்வார் அமிசமாக
தாசராய்ப் பிறந்தகச்சி நம்பிகள் தாள்கள்போற்றி.

திருக்கச்சிநம்பி திருவடிகளே சரணம்.

---

[illegible] திருக்கச்சிநம்பிகள்

ஸ்ரீ [illegible] புஸ்தகசாலை.

11 MAR 1914

திருவல்லிக்கேணி, மதராஸ்.

---

| | |
|---|---|
| | ரு. அ. பை. |
| நாலாயிர திவ்யப்ரபந்தம். 108 திவ்விய தேசப்ரபாவத்துடன் .. .. .. .. | 2—0—0 |
| திருப்பாவை மூவாயிரப்படி வியாக்யானம் .. | 1—8—0 |
| பிரபன்ன காயத்ரி என்னும் ராமாநுஜநூற்றந்தாதி வியாக்யானம் .. .. .. .. | 0—12—0 |
| திருவாய்மொழி. பாசுரங்களுக்குப் பிரதிபதத்துடன் .. | 2—8—0 |
| நித்யாநுசந்தானம். முன்னடி பின்னடி படங்களுடன் | 0—7—0 |
| மூவாயிரப்படி குருபரம்பரை யென்னும் பழநடை .. விளக்கம் .. .. .. .. | 0—12—0 |
| அஷ்டாதச ரகசியம். பெரியவாச்சான்பிள்ளை நிகமனப்படியுடன் .. .. .. .. | 1—4—0 |
| பதினெழுரகசியம். வேதாந்தாசார்யர் அருளியது .. | 0—12—0 |
| திரயக்கட்டு ரகசியம் .. .. .. .. | 0—4—0 |
| 18 குட்டி ரகசியம். திருக்கோட்டியூர்நம்பி உடையவ.. கருளியது .. .. .. .. | 0—3—0 |
| திருமந்த்ரார்த்த வியாக்யானம். அநுபந்தங்களுடன் .. | 3—0—0 |
| திருவாராதனக்கிரமம். படத்துடன் .. .. | 0—2—0 |
| இருசமயவிளக்கம். படத்துடன் .. .. .. | 0—12—0 |
| விலக்ஷணமோக்ஷாதிகாரி நிர்ணயம் .. .. | 0—12—0 |
| பிரமசூத்ரபாஷ்யம் .. .. .. .. | 3—0—0 |
| சந்தியாவந்தனபாஷ்யம் .. .. .. | 1—4—0 |
| தில்லைத் திருச்சித்ரகூட மான்மியம் (வசனம்) .. | 0—5—0 |
| புது வேதாளக் கதைகள் .. .. .. | 0—8—0 |
| சுந்தரகாண்டம். ஒருபக்கம் சுலோகம் ஒருபக்கம் தாத்பர்யம் | 1—8—0 |
| அத்யாத்ம ராமாயணம் (வசனம்) .. .. | 1—4—0 |
| ஸ்ரீ கிருஷ்ண சைதன்யசுவாமிகள் சரித்திரம் .. | 1—0—0 |
| திருக்கச்சிநம்பி ப்ரபாவம் .. .. .. | 0—4—0 |
| தசாவதார வைபவம் (வசனம்) .. .. .. | 1—0—0 |
| ஸ்ரீகளுக்கு ஞானபோதினி .. .. .. | 0—6—0 |
| கைசிகமகாத்மிய மென்னும் நம்பாடுவார் சரித்திரம் .. | 0—2—0 |

☞ காடலாக்கு வேண்டுபவர் அரையணா ஸ்டாம்பு அனுப்பவும்.

ஸ்ரீ







பேயற்கினியான்தாசர் இயற்றி யருளிய

# திருக்கச்சிநம்பி அஷ்டகம்.

---

பூவிருந்தவல்லிநக ரதிலே செட்டு
புரிந்துவாழ் வீரரா கவர்த மக்கு
மூவருக்குப் பின்னாக முளைத்துத்தந்தை
முதலாகத் தொழிற்குதவத் தந்தபொன்னைத்
தாவுருவர் ததீயாரா தனத்திற் போக்கி
துறந்துகுடி செங்கழுநீர் வழிகடந்து
காவுடைய கச்சிநகர் தனிலே புக்கு
கதிநீயே அருளாளா வென்றோய் போற்றி. 1

தேப்பெருமாள் நெருப்பிடைநின் றிளைத்தாரென்று
திருவால வட்டம் தாங் கடிமை பூண்டு
வாய்ப்புடைய இலச்சினையைப் பெறுவதற்காய்
வரதனருள் கொண்டுவெள் ளறைகடந்து
காப்புரிசைத் திருவரங்க நகரில் வாழ்ந்த
கலாநிதியாம் ஆளவந்தார் கழல்வணங்கி
தீப்புடைசக் கரப்பொறியை யொத்திக்கொண்டு
சீடனென மனுக்கொண்ட செல்வா போற்றி. 2

திருவரங்கன் காட்சியிலே யீடுபட்டுத்
தினமுமங்கே திருப்பணிசெய் திருக்கவெண்ண
ஒருவரங்கன் கச்சியடைந் துய்யச்சொல்ல
உத்தமமென் றாசிரியன் விடையைப் பெற்று
பெருவளஞ்சேர் பேர்கண்டி யூர்குடந்தை
பின்னந்திபுரம் விண்ணகரையூர் சேறை
திருராஜமனூர் கோயில் கண்ணமங்கை
திருக்கண்ணங்குடிநாகைத்திரிந்தோய்போற்றி. 3

கண்ணபுரத் தேழிரவு தங்கி மூன்னாள்
கனத்தசிறு புலியூரில் கழித்து வெள்ளி
அண் ணுகுடி சீராம நகரம் ஆலி
அருந்தில்லை வீரநா ரணனூர் கண்டு
எண்ணரிய ஐந்த்ரபுரத் திருந்து கச்சிக்
கெழுந்தருளி யருளாளற் கடிமை செய்ய
நண்ணரிய நாரணனால் கஜேந்த்ர தாச
நாமத்தைப் பெற்றிட்ட நாதா போற்றி. 4

பெற்றோருக் கருள்செய்ய பெருமா ளோடும்
பிறந்தவூர் சென்றியிவர்ந் தடைந்து நோக்கி
மற்றோரின் பொருளால்பூ ணரிக்குச் செய்து
மஞ்சனநீர் தருந்தொண்டை யடிமை போந்த
கற்றவிரா மானுஜனுக் கமைத்துக் கண்ணன்
கமலையுட னுலாவுவதைக் கண்டு சொல்லி
பற்றறுத்த யமுனைமுனி பதவி சேர்ந்த
பண்பறிந்துகுரவன்கடன் கழித்தோய்போற்றி. 5

அடுத்தவிரா மானுஜனுக் காறுவார்த்தை
ஐயன்சொலத் தெரிவித்தோர் நாளுண் புக்கு
விடுக்கவவ னில்லறத்தை விரகு சூழ்ந்து
விண்ணவனோ டொருங்குண்டு விளக்கிக் காட்டி

கடுத்துவந்த ஏழரை யாண்டுச் சனியை
கடிகையே முரையதனிற் கழித் தனேக
எடுத்தவுரை யெம்பெருமான் சொல்லக் கேட்டே
எடுக்கவிளக் கிசனைக்கொள் இறையே போற்றி. 6

அடியான்போல் அருளாளன் மழையிலோர்நாள்
அரவதனைக் குடையாக்கி யேந்தக் கண்டும்
சுடுமோர்நாள் காற்குறடாய்க் கூர்மநாதன்
சுமந்தபரி சறிந்துமனம் நொந்து நீங்கி
கடிகைகடந் தேழுமலைக் கேகும் போது
கழுநீர்கட் டுடனலரக் கருணை பூத்து
நடையிடையே மறித்தவற் கம்மலரை யீந்து
நரனை திருமலையானுய்க் கண்டோய் போற்றி. 7

பூமிவலம் வரற்கிணையா மினையாழ் வாரைப்
போற்றிவலம் வரலென்று யதிக் குரைத்து
நேமனத்தால் பிறப்பூரில் மூவர் அர்ச்சை
நேர்வுறக்கண் டுடற்சோர்வை யோர்நாள் நோக்கி
சேமமென வாயுளைப்பின் னினையாதையன்
திருவட்ட கஞ்சொல்லித் திருநா டாண்ட
தூமனத்தாய் ! திருக்கச்சி நம்பிப் பேரோய் !
துணையடியென்னெஞ்சிருத்தியாள்வாய்போற்றி. 8

திருக்கச்சி நம்பிகள் திருவடிகளே சரணம்.

---